# புயல்

(டெம்பஸ்ட், ஷேக்ஸ்பியர் நாடகம்)

(1954-ல் கரந்தைத் தமிழ்ச் சங்கத் 'தமிழ்ப் பொழில்' தொகுப்பு)

பதிப்புரிமை
இரா. ஏ.

1956

விலை ~~1-12-0~~

# புயல்

(டெம்பெஸ்ட், ஷேக்ஸ்பியர் நாடகம்)



★

மொழிபெயர்ப்பு :

புலவர், இரா. ஏகாம்பரநாதன்

★

வெளியீடு :

**இரா. ஏகாம்பரநாதன்,**

தமிழகம்,

**1500 தெற்கலங்கம், தஞ்சை.**

# ஆய்வுரை.

இயற்கை உவமை, இன்ப வாழ்வு இவற்றை அடிப் படையாகக் கொண்ட பண்டைய செந்தமிழ் இலக்கியத் திற்கு இலக்கணம் வகுத்த தொல்காப்பியர் மொழிபெயர்ப் பின் நலன்பற்றியும் பின்கண்டவாறு கூறியுள்ளார்: பிற மொழிகளிலிருந்து மொழிபெயர்த்தல் மொழியாக்கத்திற்கு மிகவும் ஏற்றது. மொழிபெயர்ப்பில் தொகுத்தல், விரித் தல், தொகைவிரி, (நேர்) மொழிபெயர்ப்பு என நான்கு வகை முறைகளை மேற்கொள்ளலாம் என்பது.

அவர் கூறிய இலக்கணம் உலகநாட்டின் மொழி பெயர்ப்பு அனைத்துக்கும் பொருந்துவதாகும். ஆங்கி லேயரும் இவ் விலக்கணத்திற் கொப்பவே மொழிபெயர்ப் பால் நலனடைந்தனர் என்னலாம். பத்தொன்பதாம் நூற் றாண்டின் தொடக்கத்திலும் அதற்குச் சற்று முன்னரும் தமிழ், ஆரியம், சீனம் போன்ற முதுமொழிகளிலிருந்து ஆங்கிலத்தில் பல நூல்கள் மொழிபெயர்க்கப்பட்டதென் பர். பல மொழிபெயர்ப்பு நூல்களால் ஆங்கிலத்திற்கு ஏற் பட்ட ஆக்கம் கொண்டே ஷேக்ஸ்பியரால் பதினாறும் நூற் றாண்டில் உலகம் புகழும் உயர்ந்த நாடக நூல்களை எழுத முடிந்தது.

அவற்றுள் இந்த நாடகம் தொகைவிரி என்ற முறை கொண்டு எழுதப்பட்டதாகும். "டெம்பஸ்ட்" என்ற முதல்நூலுடன் இதனை ஒப்பிட்டுப் பார்த்தால் தொகுக்கப்பட்ட இடங்கள் இன்னின்ன, விரிக்கப்பட்ட இடங்கள் இன்னின்னவென்பது நன்கு புலனாகும். நேர் மொழிபெயர்ப்பு, தழுவி எழுதல் என்ற முறைகளைப் பலர் மேற்கொண்டு எவ்வளவோ நூல்கள் எழுதித் தமிழாக்கத் திற்குத் துணை செய்துள்ளன. இந்த நூலைப் பொறுத்த வரையில் ஆங்கிலத்தில் இதன் முதல்நூலைப் படிக்க இய

லாதவர் தமிழில் இதனைப் படித்துணரலாம். இரு மொழி களையும் நன்கு கற்றவர்களோ இரண்டினையும் ஊன்றிப் படித்து, ஒப்பிட்டுப் பார்த்து இதன் பொருந்தாமை கண்டு நகைக்க நேரின் ஏற்ற வகையில் மொழிபெயர்க்க முனைய லாம். அம் முயற்சிக்குத் தூண்டுகோலாக இது அமை யினும் அதுவும் தமிழாக்கத்திற் குதவுவதேயாம்.

ஷேக்ஸ்பியரால் எழுதப்பட்ட ஏறத்தாழ முப்பத் திரண்டு நாடகங்களுள் இது நிறைந்த கருத்துக்களுடன் நாடக இலக்கணத்திற்கே இலக்கியமாய் அமைந்ததென்பர். ஒரு தலைவனின் செயல்களாய், ஒரு இடத்தில், ஒரு பொழுதில் எல்லாச் சுவைகளும் பொருந்துமாறு அமைத்து, ஆசிரியர் இதனை இயற்றியுள்ளார் என்று பென்ஜான்சன் போன்ற நாடக ஆசிரியர்கள், ஷேக்ஸ்பியரைப்பற்றியும் அவ ரது பிற நாடகங்களைப்பற்றியும் தாம் கொண்டிருந்த பழைய எண்ணத்தை மாற்றிக்கொண்டு புகழ்ந்தனர் என் பர். ஷேக்ஸ்பியரின் மற்ற நாடகங்களில் மேற்கண்ட இலக் கணத்துக்கு ஒவ்வாத குறையுண்டு என்பதற்கு (விண்டர்ஸ் டேல்) மாரிக்காதை என்ற இவரது மற்றொரு நாடகம் (என்னால் மொழிபெயர்க்கப்பட்டது) போதிய சான்று பகரும்.

இனி நாடக பாத்திரங்களைப்பற்றி நோக்குவோம். சயசீலன் தனது குணத்திற்கும் தனது தம்பி அமணன் குணத்திற்கும் உள்ள முரண்பாட்டினைத் தன் மகள் மாலி னிக்கு எடுத்துக் காட்டுகிறான். அவள் காரணம் கேட் பதற்கு முன்னரே சயசீலன் குலத்தின்கண் ஐயப்படும் வழக்காறும் உலகில் உண்டென்று எடுத்துக் காட்டி உல கியல் உண்மைகளை அறிவுறுத்துகிறான். தமிழ் மரபுக் கேற்ப வீராசேந்திரனும் மாலினியும் அகப் புணர்ச்சி கொள்ள வாய்ப்பளித்தும், பின்னர் சடங்குகளுடன்கூடிய கற்பொழுக்கத்தை வலியுறுத்தியும், மணமக்களை ஆசி கூறி வாழ்த்தக் காத்தவராயன் குழுவினையே, இந்திராணி, கூல

லட்சுமி போன்ற பெண்களாக வரச்செய்தும் அமைத்துள்ள நுட்பம் கவனிக்கத் தக்கவையாகும்.

கப்பல் தொழிலாளிகள், திருக்குப் போன்றவர்கள் தத்தம் நிலைக்கு ஏலாத உயர்நடை பேசுமாறு முதல் நூலுக்கு மாறாக இதில் அமைக்கப்பட்டது, கன்னித் தமிழின் தரம் குறையக்கூடாதென்பதற்காகவேயாம். மாலினி, திருஞானசம்பந்தர் பெற்றது போன்ற ஞானத்தன்மையை இளமையிலேயே தனது தந்தைமூலம் பெற்றாள் என்ற ஒரு கோட்பாடு கொண்டே, விரித்தல் இலக்கணத்தால் முதல்நூலினும் மாறுபட்டு மாலினி சொற்கள் கூறப்பட்டுள்ளன என்று அமைதி கொள்ளலாம். தமிழ்ப் பண்புக்குப் பொருந்தாத சில நிகழ்ச்சிகளைத் தந்தையும் மகளும் பேச நேரிடுகிறதே எனின், மாலினிக்குத் தோழி முதலியவர்கள் இருந்து அறிவு கொளுத்த வாய்ப்பில்லாத தனியிடமாயிருத்தலாலும், தன் மகள் இரண்டு அரசாங்கங்களுக்குரிய அரசியாகும் நிலையில் உலகியல் அறிவு நிறைய வேண்டுமென்று கருதியதாலும் அவ்வாறு பேசுதல் சாலும் என்பது. எதிர்காலம் அறியும் நம் துறவிகளின் சக்தியையும், துடுமென எதனையும் மாற்றும் இக்கால விஞ்ஞானிகளின் வன்மையையும் சயசீலன் பெற்றிருந்ததாக ஷேக்ஸ்பியர் இதில் அமைத்துள்ளார் என்பது உணர்ந்து இன்புறத் தக்கதாகும்.

நாகத்தீவில் நாடகம் தொடங்கும் போது முன்னைய நிகழ்ச்சிகளையெல்லாம் மாலினிக்குச் சயசீலன் கூறுகிறான். அது நாடகம் பார்ப்பவர்க்கு மிகவும் அலுப்புத்தரக்கூடியதாகலின் சயசீலன் என்ன மாலினி கவனிக்கிறாயா? தூக்கமா? விளங்குகின்றதா? என்றெல்லாம் முன்னிலைப் புறமொழியாகப் பார்ப்போருக்கு விழிப்பூட்டுகிறான். இது போன்ற பல நுட்பங்களும், அரசியல் தன்மைகளும் உலகியல் உண்மைகளும் இதில் கற்றுணரலாம்.

கலியன் மூலம் கயமைக்குணம் உடையவர்கள் போக்கினையும், சயசீலன் மூலம் சிறந்த மக்களது போாற்றலையும்

குறிப்பிடுகிறார். மக்களை கயவரை அடிப்படுத்தி வேலை வாங்குதலையும் தெய்வ ஆவிகளைக் கட்டுப்படுத்தி ஆவன செய்துகொள்ளுதலையும் மேற்கொள்ள வல்லுநர் என்பதனையும் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார் என்பது.

அமணன் இராசசிம்மனையும் தன்னைப்போல் ஆக்க எண்ணினான்; அவனது முன்னவனைக் கொல்லத் தூண்டினான். இவைபோன்ற நிகழ்ச்சிகளைப் படிப்போர் குறிப்பால் அறியுமாறு, ஆசிரியர் இந்த நூலை அமைத்திருக்கின்றார்.

ஷேக்ஸ்பியர் எழுதிய நாடக நூல்களுள் இதுவே கடைசி நூலாகும். தான் எழுதிய எல்லா நாடக நூல்களுக்கும் தனது மந்திர சக்தியே துணையென்பதையும், இதனை எழுதிய பிறகு தனது மந்திர சக்திகளை விட்டொழித்துவிட்டார் என்பதனையும் இதில் மறைமுகமாகக் காட்டுகின்றார் என்று பலர் எண்ணுகின்றனர். இது இறுதி நாடகமாக இருப்பதே இவ்வெண்ணத்திற்குக் காரணம் போலும்.

இதில் நமது நாடு, பண்பு, மரபு முதலியவற்றிற்கேற்பப் பெயர்களும், இடங்களும், நிகழ்ச்சிகளும் திருத்தி அமைக்கப்பட்டுள்ளது. இது தொகைவிரி என்ற வரம்புக்கு மீறிச் சென்றதாகக் கருதமாட்டார்கள். கருதினும் வேறுபல குறைகள் காணினும் பொறுக்குமாறு வேண்டிக்கொள்கின்றேன். இம் மொழி பெயர்ப்புக்கு உதவி செய்து என்னை ஊக்கிய திரு. கோபாலராவ் அவர்களுக்கும், இவ்வாய்வுரைக்கு உதவிய தஞ்சைச் சரபோசி கல்லூரி ஆங்கிலப் பேராசிரியர் திரு. R. V. வரதராஜன் அவர்களுக்கும் எனது வணக்கமும் நன்றியும் உரியதாகுக.

ஆசிரியர்,

இரா. ஏ.

# ★ புயல் ★

## கதைச் சுருக்கம்.

•••○○•••

சயசீலன் வஞ்சியை ஆண்டான். அவன் குடிகளிடம் பேரன்புடையவன். அவன் கலைவல்லான். அவனது கலைப் பற்று, அவன் ஆட்சிப் பொறுப்பும் நழுவுமாறு மிகுந்தது. அவனது கலைவன்மை ஆக்கவும் அழிக்கவும் வல்லதென்பதை நடைமுறையில் காண முயற்சித்தான். அவனுடைய இளவல் அமணன் என்பான் அண்ணனுக்கு முற்றும் மாறானவன். தீய எண்ணமுடையவன். அண்ணனைக் கொன்று அரசினைக் கைக்கொள்ள எண்ணினான். ஆனால் குடிகளின் பலம் அண்ணனுக்கு இருந்தது. அப்போது நாகையை ஆண்ட அரசன் இராசேந்திரன். அவன் இளவல் இராசசிம்மன். இந்த இருவருடைய உதவியையும் அமணன் நாடினான். நாகைக்கு வஞ்சி இறை செலுத்தவும் உடன்பட்டான். மூவரும் செய்த சூழ்ச்சியின் முடிவாக, சயசீலனும் அவனது சிறுமியும் ஒரு ஓட்டைக் கப்பலில் வைத்துக் கடலில் செலுத்தப்பட்டனர். அப்போது அரசனிடம் அன்புமிக்க கோவிந்தமாறன் என்ற ஒரு அமைச்சன் கலைச்சுவடிகளையும் உணவுப் பொருள் முதலிய அரசனுக்குரிய வசதிகளையும் அம்மூவருக்கும் தெரியாமல் அக்கப்பலில் வைத்து அனுப்பினான், கப்பல் நாகத்தீவையடைந்தது.

மந்திரம் வல்ல கூனி என்பவள் வேறோரிடத்திலிருந்து தண்டனையாக அத்தீவில் குடியேற்றப் பட்டிருந்தாள். அங்கு, காத்தவராயன் (என்னும் தெய்வ ஆவி) தன் இனத்தவருடன் இருந்தான். கூனிக்கு அக்காத்தவராயன் கீழ்ப்படியாமையின் அவனையும் அவன் இனத்தாரையும் தன் மந்திர சக்தியால் அத்தீவில் உள்ள மரங்களைப் பிளந்து அவற்றுள் சிக்கவைத்து விட்டாள். அவர்கள் அவற்றில் நெருக்குண்டு துன்பத்தோடிருந்தனர்.

அக்கூனிக்குக் கலியன் என்ற ஒரு அழகற்ற மீன் முகப்பையன் உளன். அவன் கடிய தொழில்களை யெல்லாம் களைப்பின்றிச் செய்வான். ஆனால் நன்றியற்றவன். தாயைச் சிலநாட்களில் இழந்து தனித்திருந்தான். அத் தீவை யடைந்த சயசீலன் கலியனைத் தன் கையாளாகக் கொண் டான். காத்தவராயனையும் அவன் இனத்தையும் தன் கலை வன்மையால் மரப் பிளவுகளிலிருந்து வெளிப்படுத்தினான். காத்தவராயன் நன்றியறிவோடு சயசீலனுக்குத் தொண்டு செய்துவந்தான்.

நாகை அரசன் இராசேந்திரனுக்குக் கமலா என்ற ஒரு மகளும் வீராசேந்திரன் என்ற ஒரு மகனும் உளர். இரங் கூன் அரசனுக்குக் கமலா மணம் செய்து தரப்பட்டாள். இரங்கூனிலிருந்து திரும்பியபோது சயசீலன் புயலை உண் டாக்கிக் கடலைக் கொந்தளிக்கச் செய்தான். கப்பலில் உள்ளவர்கள் நடுங்கினர். சயசீலன் ஆணைப்படி, காத்தவ ராயன் கப்பலை அத்தீவில் ஒதுக்கிக் கப்பலில் இருந்தவர் களுக்கு அழிவின்றி அத்தீவிலேயே பல இடங்களில் அவர் களைப் பிரித்துத் தனித்தனி வைத்தான். புயலில் கப்பல் கலக்குற்றதைக் கண்ட மாலினி நடுங்கினாள். சயசீலன் மாலினியைத் தேற்றினான். அவனது ஆணையால் காத்தவ ராயன் வீராசேந்திரனை மாலினிமுன் சேர்த்தான். சய சீலனது கலைவன்மையால் இவர்களுக்கேற்பட்ட காதல் எல்லை மீறுகிறது. பின்னர் தானே முன்வந்து தடுத்துக் காதலுக்கு வரம்பு கட்டினான்.

அமணனும், இராசசிம்மனும் இராசேந்திரனைக் கொல் லத் திட்டமிடுகின்றனர். காத்தவராயனால் அது விலக்கப் படுகிறது.

கலியன், கணேசனையும் திருக்கையும் அழைத்துச் சய சீலனைக் கொல்லத் தூண்டுகிறான். அதுவும் பழுதடை கிறது.

இராசேந்திரன், இராசசிம்மன், அமணன், கோவிந்த மாறன் முதலியோருக்கு ஒரு விருந்து நிகழ்கின்றது. விருந்தில் கைக்கெட்டியது வாய்க்கெட்டாமல் அரசர்கள் துன்புறுகின்றனர். தமது தவற்றினை உணர்கின்றனர். மேலும் சயசீலனது கலைவன்மையையும் அவனது நிலைமையையும் உன்னிய அமணனும் இராசசிம்மனும் சயசீலனிடம் மன்னிப்புக் கேட்கின்றனர். அமணன் வஞ்சி நாட்டினை ஏற்றுக்கொள்ள வேண்டுகிறான்.

இராசேந்திரன் தனது மகனை இழந்தமைக்கு வருந்துகிறான். சயசீலன் அவனது வருத்தத்தை நீக்கி அவனுக்கு மகிழ்வளிக்க எண்ணி அழைத்துச் சென்று தனது குகைக்குள் யாழ் மிழற்றிக்கொண்டிருக்கும் மாலினியையும் வீரராசேந்திரனையும் காட்டுகிறான். காத்தவராயன் விடுதலை பெறுகிறான்.

கடலில் காத்திருந்த கப்பலில் யாவரும் நாகை யடைந்து மணமக்களுக்கு மணச் சடங்கு நிகழ்த்திப் பெரு விருந்தளித்து மணமக்களை வஞ்சி, நாகை இரண்டிற்கும் உரியவர்களாக்கத் திட்டங்கள் நாகத் தீவிலேயே நிறைவேற்றப்படுகின்றன.

# புயல்

## நாடக பாத்திரங்கள்.

| | | |
|---|---|---|
| சயசீலன் | — | வஞ்சிநாட்டரசன் |
| அமணன் | — | அண்ணனைத் துரத்திவிட்டு வஞ்சியைப் பெற்ற இளவல் |
| இராசேந்திரன் | — | நாகையரசன் |
| இராசசிம்மன் | — | நாகையரசனின் இளவல் |
| வீரராசேந்திரன் | — | நாகையரசனின் மகன் |
| கோவிந்தமாறன் | — | வஞ்சிநாட்டு அமைச்சன் |
| ஆதிநாராயணன் | — | வஞ்சிநாட்டுப் பிரபு |
| பராந்தகன் | — | ,, |
| திருக்கு | — | வஞ்சிநாட்டுக் கட்டியங்காரன் |
| கணேசன் | — | வஞ்சியரசனின் அடைப்பைக்காரன் |
| மீகான் | — | வஞ்சி மன்னனின் கப்பல் தலைவன் |
| மாலுமி | — | வஞ்சி மன்னனின் கப்பலோட்டி |
| கூனி | — | நாகத்தீவில் உள்ள மந்திரக்காரி |
| கலியன் | — | கூனியின் மகன் அழகற்றவன் (மச்சாவதாரி) |
| காத்தவராயன் | — | நாகத்தீவில் உள்ள தெய்வ ஆவி |
| மாலினி | — | சயசீலனின் மகள் |
| கமலம் | — | இராசேந்திரனின் மகள் |
| கூலலட்சுமி<br>பூமாலி | } | வாழ்த்துக்கூறியவர் |

# அங்கம் 1. களம் 1.

(கடல்) புயலால் கப்பல் தடுமாற்றம்

**மீகான்:—** யார்? யாரங்கே?

**மாலுமி:—** இதோ; என்ன பணி?

**மீகான்:—** அனைவருக்கும் அறிவி; புயல்! கப்பல் கரையில் மோதும் வேளை; தடுப்பு வேலை; விரைந்து செய்க.

**மாலுமி:—** (மற்ற வேலையாட்களைப் பார்த்து) மீகான் உத்தரவு கேட்டதா? கட்டவிழுங்கள். பாயை இறக்கிச் சுருட்டுங்கள். உங்கள் முழுக் கைவரிசையும் காட்டத்தக்க வாய்ப்பு இதுதான். வாழ்வில் வாய்ப்புப் பலதரம் வருவதில்லை, உம்; முனையுங்கள். அதோ மீகான் நிற்பது தெரிகிறதா? பரபரப்பைக் கவனியுங்கள். உம்; வேலை, வினை. வினையே ஆடவர்க்குயிர். ஏ வானமே! நன்றாகப் பெய்; கொட்டு; உன் முழுப்பலத்தையும் காட்டு. காற்றே நன்றாக ஊது; வாயைத் திறந்து உன் வயிறு நோகும்வரை ஊது. எங்களுக்குப் பயம் இல்லை. கடலிலே மிதக்கும் நாங்கள் உங்களுக்கா பயப்படுவோம். உங்களை எதிர்க்க முடியாதுதான், ஆனால் பயம் ஏது? பயந்து என்செய்வது?

(இராசேந்திரன், இராசசிம்மன், வீராசேந்திரன், அமணன் பராந்தகன், ஆதிநாராயணன், கோவிந்தமாறன், வேறுசிலர்)

**இராசேந்திரன்:—** மாலுமி, மீகான் எங்கே? யாரும் அஞ்சக்கூடாது. மீகான் எங்கே?

**மாலுமி:—** ஏன் இங்கு வந்தீர்கள்? கீழ்த்தட்டுக்கே செல்லுங்கள்,

**ஆதிநாராயணன்:—** கேள்விக்கு விடையா இது? மீகான் எங்கே?

**மாலுமி:—** குருடா? செவிடுகூடவா? அதோ நின்று உரக்கத்தான் எச்சரிக்கின்றாரே. வெளிப் புயலுக்கு உள்ளிருந்து உதவுவது விரைவில் உங்களுக்கும் அழிவைத் தேடிக்கொள்வதாகும். எம் வேலைக்குத் தடை செய்யாதீர்கள். வினை தெரிந்து வெளியிலிருந்து வேலைசெய்ய வேண்டும்.

**கோவிந்த:—** இல்லை. கொஞ்சம் பொறுமையாக.......

**மாலுமி:—** கடல் – காற்று இவற்றிடம் பொறுமையை வேண்டலாம். ஆனால் இச்சூழ்நிலையில் நீர் பொறுமையைக் கொள்வதும் கேட்பதும் வியப்புத்தான்.

**கோவிந்த:—** என்னுடன் இருப்பவர்கள் யார் என்று தெரிந்துகொண்டுதான் பேசுகிறாயா? சற்றுப்பார்.

**மாலுமி:—** என் உயிரைப்பார்க்கிலும் பெரிதாக எண்ணிப்பார்க்க இவ்வுலகில் என்ன இருக்கமுடியும்? என்னிடம் வீணில் நும் அதிகாரத்தைக் காட்டவேண்டாம். அலைகளுடன் சமாதானமாவது பேசமுடிந்தால் செய்யலாம். அதிகாரம் செலுத்தவோ சமாதானம் பேசவோ கடல்அலைகள் மக்கட் கூட்டமல்ல. உங்கள் சக்தியை எனக்குக் காட்ட வேண்டும் என்றால் இது நல்ல சமயந்தான். கொந்தளிப்பை அடக்குங்கள். முடியாவிட்டால் அறைகளில் உட்கார்ந்து கொண்டு தெய்வ நம்பிக்கை காட்டுங்கள். வேலையைத் தடுக்கவேண்டாம். யாரடா? என்ன வாய்பார்த்த தன்மை. கைவரிசைகாட்ட இதுதான் சமயம். கயிற்றை இழுங்கள். பாயைச் சுருட்டுங்கள்.

**கோவிந்த:—** இந்த ஆளின் முகக்குறியில் நான் ஓர் உண்மை காணுகிறேன். இவன் கடலில் சாகான். தூக்

கிடப்பட்டே சாவான். இவன் சாவின் முடிவே நமக்கெல்லாம் இப்போது சாவாமையைத் தரும் என்று நம்பவேண்டியுளது. ஏ, இழுக்கப்படும் கயிறே! உன்னைத்தான் வேண்டுகிறேன். நீயோ மற்றொரு கயிறோ, முடிச்சாகி அவன் கழுத்து முடிச்சை இறுக்கி இன்பம் துய்க்கப் போகிறதாக உணர்கிறேன். அதனால் கப்பலில் உள்ள ஒருவருக்கும் கடலில் சாவில்லை. கயிறே நீ வாழ். இந்த மாலுமி தூக்குத்தண்டனைப் பேர்வழி●ாகாவிட்டால் என்பாடு ஆபத்துத்தான்.

மாலுமி:— ஏய், கயிற்றைத் தளர்த்திப் பாயைத் தணியுங்கள். தணித்து நிறுத்துங்கள், காற்று மேலே போகட்டும்.

(இராசசிம்மன், அமணன், கோவிந்தமாறன் அறைகளுக்குச் செல்லாமல் மீகானை நோக்கி மேலே ஏறுதல்)

மாலுமி:— உப்புத்தண்ணீர் குடிக்க உங்களுக்குள்ள ஆசை கப்பலையல்லவா கவிழ்க்கும்போல் இருக்கிறது. விரைவில் உரிய இடங்களுக்குப் போய்விடுங்கள். பிறரைக் காப்பாற்ற உயிர்விடலாம். தம் சாவால் பிறர் சாக எண்ணி ஏன் திண்டாடுகிறீர்கள்?

இராசசிம்மன்:— மாலுமி, என்ன தகாத சொல்லும் தீச்சொல்லும் காற்றுடன் கலந்துவிடுமாறு பேசுகிறாய்? மரியாதை இல்லையே பேச்சில். உன் தொண்டை அடைபடட்டும்.

மாலுமி:— அதிகாரம் மரியாதை எல்லாம் எப்போது? வாழ்வுக் காலத்தில், சமாதானக் காலத்தில்தான் – ஆபத்துக் காலத்தில் அல்ல. சட்டைப்பையில் கையை வைத்திருப்பதால் என்ன பயன்? உயிர் போய்விட்டால் பெருமை நிற்குமா? கையை வெளியில் எடுத்து எம்முன் வேலை செய்யுங்கள். யாரும் இப்போது அதிகாரப் பேச்சுப் பேச வேண்டாம்.

**அமணன்:**— ஏ நாய்! கப்பல் நாய், ஏன் குலேக்கின்ருய்? உனக்குத் தகப்பன் பெயர் தெரியுமா? அல்லது வளர்த்த தாயைத்தவிர பெற்ற தாயை — விற்றதாயை யார் என்று தெரியுமா? நாங்கள் அரசர்கள், சாவுக்குப் பயப்பட மாட்டோம். அதற்காக அஞ்சிக் குலேக்காதே.

**கோவிந்த:**— இன்று யாருக்கும் சாவு கிடையாது. கடல் குமுறட்டுமே, கப்பல் விண்ணே முட்டி முட்டி மீளட்டுமே. மாலுமி கடலில் சாகான். தூக்கில்தான் சாவான். அந்தப் பலமே நம்மையெல்லாம் கரைசேர்த்துவிடும்.

**மாலுமி:**— யாரடா அது? கப்பலேக் கரைப்பக்கம் செலுத்தாதே. கடல் பக்கம் விடு. இரண்டு 'டிகிரி' உள்ளே செலுத்து.

**வேலேயாட்கள்:**— (நனேந்துகொண்டே) போச்சு. கப்பல் சில விநாடிதான். பின்னர் எல்லாம் கடலுக்குள்ளே தான். யாவரும் விருப்பமான தெய்வத்தை நினேத்துக் கொள்ளுங்கள்.

**கோவிந்த:**— அரசனும் இளவலும் பிரார்த்தனே செய்கிற பக்கமாக நாமும் போவோம்.

**அமணன்:**— ஐயோ; நமது உயிரை இக் குடிகாரப் பயல்கள் கையில் அல்லவா ஒப்படைத்துவிட்டோம். ஒவ்வொருவனுக்கும் வாயைப்பார் காதுவரையும், அதற்குப் பின்பும்கூட.

**கோவிந்த:**— கடல் துளிகள் ஒவ்வொன்றும் சப்தமிட்டு வந்தாலும் அவன் சாகான். சமுத்திரத்தால் அவனேக் கொல்ல முடியாது. அவனுக்காகக் கயிறு காத்திருக்கிறது. அதுவே நம்மைக் காக்கும். அவன் தூக்கில் சாகும்போது நாம் இருந்து காணுவோம். நான் கயிற்றையே வேண்டுகிறேன். யாரும் அஞ்சவேண்டாம்.

(கப்பலுக்குள் ஆரவாரம் — ஐயோ, அம்மா, அப்பா, தம்பி, அண்ணே, தெய்வமே, கடவுளே தண்ணி கழுத்துக்கு வந்துவிட்டதே)

**அமணன்:—** வாருங்கள் யாம் அரசனைச் சூழ்ந்து அவருடனே மூழ்குவோம், நாம் வேறென்ன செய்யமுடியும்?

**கோவிந்த:—** நான் சாவதற்கு அஞ்சவில்லை. ஈரமான உடையுடன் பிணமாவது எனக்கு அருவருப்பாக இருக்கிறது. இச்சமயத்தில் இக்கடல் முழுவதையும் யாருக்காவது தானம் செய்ய எண்ணம். வாங்கிக்கொள்ள ஒருவரும் இல்லையே என்பதுதான் சிறிது கவலை.

---

## அங்கம் 1. களம் 2.

(சயசீலன் குடிசைக்கெதிரில் — சயசீலனும் மாலினியும்)

**மாலினி :—** அப்பா, நம் மந்திரத்தால் இப்புயல் கிளப்பப்பட்டிருந்தால் கொந்தளிப்பைச் சற்றுக் குறையச் செய்யுங்கள். விண்ணில் எவ்வளவு கருமை. கருப்புத் தாரினை — மையினை விண் கொட்டுமானால் மண் எவ்வளவு கருப்பு ஆகும்? இத் தீவும் நாமும் எந்நிலையை அடைவோம். வெட்டும் மின்னலைப் பாருங்கள். கடலையும் மண்ணையும் பிளக்கின்றது. இடியொலி, அடேயப்பா! மண்ணையும் விண்ணையும் யார்தான் மோதவிட்டு வேடிக்கை பார்க்கின்றார்களோ? கடல் அலைகள் விண்ணைத் தொடுகின்றன. மின்னொளியை அணைக்க முயல்கின்றன. கப்பல் என்னபாடு படுகிறது. உள்ளிருப்போரை எண்ணினால் — ஐயோ அவர்களின் அழுகுரல் தங்கள் காதில் விழவில்லையா?

நல்லோர்களும் இருப்பார்களே! அவர்களுக்குமா இத் தொல்லை. நினைக்கும் கேடு தனக்கென்பர். தாங்கள் முதல்; நான் தங்களின் எச்சமாகிய மகள். தாங்கள் அவர்களுக்கு நினைத்த கேடு—மந்திரத்தால் செய்த தொல்லை என்னையே வாட்டுகிறது. ஆனால் நான் ஒரு சக்தியுள்ள பெண்ணாயிருந்தால் இக் கப்பல் முழுகுமுன் உள்ளிருக்கும் அத்துணைபேரையும் காப்பேன். காக்க முடியாவிடின் அவர்களைப் பலியிடுவதன் மூலம் இக் கடலை எங்கேனும் ஒரு மூலையில் ஒடுக்கி வைப்பேன்; அல்லது மண்மேடாகவே செய்துவிடுவேன். ஐயோ! அவர்களின் ஆவி என்ன பாடு படும்?

**சயசீலன்** :— மாலினி உன் எண்ணத்தைக் குமுற விடாதே. நீ காணுதன யாவும் நிகழாதன என்று எண்ண மாட்டாயல்லவா? கண்டவை யனைத்தும் நிகழ்ந்துவிட்டன வாகவே கருதிவிடாதே. அன்றியும் ஒரு நிகழ்ச்சியைக் கொண்டு பலனை அளக்க முடியாது. நன்னிகழ்ச்சியில் கெட்ட பலனும், தீநிகழ்ச்சியில் நல்ல பலனும் உண்டாக லாம். நன்னிகழ்ச்சி, தீநிகழ்ச்சி யென்பன உன்னளவில் உறுதிப்படுவனவன்று. இந்நிகழ்ச்சியால் தீமை ஒன்றும் வராது.

**மாலினி** :— ஐயோ! இனி என் எதிர் காலத்தில் இந்த மாதிரி நாள் மற்றொரு தடவை உண்டாகாதிருக்கவேண்டும்.

**சயசீலன்** :— மாலினி இவ்வளவும் உன் நன்மைக் காகவே நிகழ்ந்தன. நீ யாரென்பது உன்னால் அறிந்து கொள்ள முடியாத நிலையில், என்னை எவ்வாறு நீ அறிவாய்? நீ எனது ஒரே மகள். நான் உனது தந்தை. நான் எங்கிருந்து வந்தேன்? எப்போது வந்தேன்? ஏன் வந்தேன்? எப்படி வந்தேன்? இக் குடிலைத் தவிர வேறு எனக்கு இவ் வுலகில் ஏதேனும் உண்டா? இவையெல்லாம் நீ எப்படி அறிவாய்? அறியும் பக்குவத்திற்கு முன்

அறிவிப்பதும் தவறாகவன்றோ ஆகும். என்னிடமிருந்து நீ எவ்வளவு தெரிந்துகொள்ளவேண்டியிருக்கின்றன? அவைகளைக் கூறலாமா?

**மாலினி**:— அப்பா, வேண்டாம். இப்போது நான் தெரிந்திருக்குமளவிலேயே அமைதியடைகிறேன், அதிகம் தெரிந்துகொள்ள வேண்டுமென்பதில் நான் ஆசைகொள்ளவில்லை.

**சயசீலன்** :—மாலினி உன்னிடத்திலிருந்துதான் நான் இதைத் தெரிந்துகொண்டேன். என்றாலும் உன் வரலாற்றைப்பற்றி மட்டும் சிறிது சொல்வேன்; கவனமாய்க் கேள். அருகில் வா. சரி கண்களைத் துடைத்துக்கொள். கப்பல்; நீ கண்ட கப்பல், உண்மையில் அழியவில்லை. அது உனது அளவற்ற கருணையை வெளிப்படுத்தியது. ஒருவருக்கும் சிறிதளவுகூடக் கெடுதல் இல்லை. துன்பமும் கவலையும் அவரவர் மனத்தைப் பொறுத்தவை. உண்மையில் ஒருவரும் அழியவில்லை. நீ கண்டது ஒன்று, நிகழ்ந்ததோ மற்றொன்று. அவற்றைக் கூறலாமா?

**மாலினி** :— அப்பா, என் வரலாற்றைக் கூறத் தொடங்கினீர்கள். அதைக் கேட்குமுன் என் மனம் வேறொன்றைக் கேட்க விரும்பவில்லையே. முதலில் அதைக் கூறுங்கள்.

**சயசீலன்**:— நாம் இங்கு வருவதற்குமுன் நீ கண்டது, கேட்டது, ஏதாவது உன் நினைவுக்கு வருகின்றதா? (வர முடியாது, அப்போது உனக்கு மூன்று வயதுதான் முடிந்திருந்தது)

**மாலினி**:— நினைவில் இருக்கிறது.

**சயசீலன்**:— இடமா? உருவமா? ஆணா? பெண்ணா? எது? சொல்லம்மா; சொல்.

**மாலினி:—** *தெரிகிறது, ஆனால் தெளிவில்லை. என் நினைவுக்கு வருகிற செய்தி உண்மையில் நிகழ்ந்ததா அல்லது என் கனவின் தோற்றமா என்பதாக ஐயத்தைத் தருகிறது. நாலைந்து பெண்கள் என்னை மார்பிலும் தோளிலும் மாற்றி மாற்றி வைத்து விளையாடினார்கள்.*

**சயசீலன்:—** *சரி. இதைத் தவிர வேறு ஏதாவது? அதைத்தொடர்ந்து நினைவுகள் வருமாயின் புதைபொருள் ஒவ்வொன்றாக அகப்படுவதுபோல நீ இங்கு வந்தவிதம், வளர்ந்தவிதம் யாவும் அறியக்கூடும் என்று நான் நம்புகிறேன்.*

**மாலினி:—** *வேறு எனக்கு ஒன்றும் நினைவில்லை.*

**சயசீலன்:—** *மாலினி, பதினான்கு ஆண்டுகட்குமுன் உனது தந்தையார் வஞ்சி அரசனாக இருந்தவர்.*

**மாலினி:—** *அப்படியானால் தாங்கள், தாங்கள் யார்? எனது தந்தையல்லவா?*

**சயசீலன்:—** *(புன்னகையுடன்) உனது தாய் கற்புடைய அரசி. அவள் உனது தந்தை நான் என்று அறிவித்தாள். எனக்கு உன்னைத் தவிர வேறு குழந்தையில்லை. நான் வஞ்சி அரசன். நீதான் இளவரசி.*

**மாலினி:—** *ஆ, தெய்வமே! யாம் எந்தப் பாவியின் சூழ்ச்சியால் இங்கு வந்தோம். இக் கடலில் அழியாது தப்பியிருப்பதும் உன் செயலால் தானோ? இவ்வாழ்வு எமக்கு நன்மையா? தீமையா? ஒன்றும் விளங்கவில்லையே.*

**சயசீலன்:—** *மாலினி, இரண்டும் கலந்தேதான் உளது.*

**மாலினி:—** *அப்பா, என்னை வளர்க்கவும், காக்கவும் தாங்கள் எவ்வளவு தொல்லைப் பட்டிருப்பீர்கள். அதை நினைக்கும்போது புதுவகையான வருத்தம் எனக்கு உண்டா*

கிறது. அவ்வருத்தம் நீங்கத் தங்கள் பொறுமையே எனக்கு அரிய மருந்தாகும்.

**சயசீலன்**:— மாலினி, நீதான் எனக்கு மருந்து. கடற் பக்கம் பார்க்கவேண்டாம். நான் கூறுவதைக் கவனமாகக் கேள்:— உன் சித்தப்பன் என் அரிய தம்பி. ஒரே தம்பி. எனது அன்புக்கு, உனக்கு அடுத்தபடியில் உள்ளவன். அவனிடம் எனது அரசப் பொறுப்பு முழுவதும் ஒப்பித்திருந்தேன். அக்காலத்தில் வஞ்சிதான் மற்ற எல்லா நாட்டினும் முதன்மை பெற்றிருந்தது. அரசன் சயசீலனும் ஒப்புயர்வற்றவன். அரச நீதிக்கும் அறத்துக்கு மட்டுமல்ல, கலை வளர்ப்பிலும் நிகரற்றவன். என் மனம் கலையறிவில் அதிகம் திளைக்க முனைந்தமையால் அரசியலும் ஆட்சியும் எனக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. நூல் நய நுகர்ச்சிக்கு அரசப்பதவி எம்மாத்திரம்? நான் அரசாங்கத்தை மறந்தேன், அதுவும் என்னை மறந்தது. இவ்வமயத்தில் நீ கூறிய படி பாவியாகிய உன் சித்தப்பன்... நன்றாகக்கேள். கடலில் பார்வை வேண்டாம்.

**மாலினி**:— இல்லையப்பா, நீங்கள் சொல்வதைத்தான் நான் உடலுருகக் கேட்டுக்கொண்டிருக்கிறேன்.

**சயசீலன்**:— செங்கோலாட்சியைக் கைவிட்டான் உன் சித்தப்பன். ஆனால் அரசியல் நுணுக்கங்களை அறிந்தான். பதவியில் சிலருக்கு உயர்வு தந்தான். துடுமெனச் சிலருக்கு மாற்றம் தந்தான். சிலரை அடக்கினான். சிலரைப் பயத்திலும் சிலரைச் சலுகையிலுமாக — எனக்குரியவர்களை — மிக நல்லவர்களாயிருந்தவர்களைக்கூட மாற்றித் தன்னுடையவர்களாகச் செய்துகொண்டான். அவன் மனம்போல அவர்களை ஆட்டிவைக்கத் தொடங்கினான். யாவரையும் எனக்குப் பகைவர்களாக்கினான். மரத்தில் படர்ந்த புல்லுருவி, மரத்தையே உறிஞ்சிப் பாழ்படுத்துவதுபோல என்னைத் தொலைத்தான். (உன் கவனம் இங்கில்லையா?)

**மாலினி :—** நன்ருகக் கவனித்துக்கொண்டுதான் இருக்கிறேன்.

**சயசீலன் :—** கவனி. எனக்கும் உலகுக்கும் இருந்த பற்றினை அறுத்துவிட்டான் என் தம்பி. நானும் கலைஞானத்தில் அளவற்ற பற்றுவைத்து இரண்டறக் கலந்து இன்புற்றிருந்தேன். நான் எங்கும் செல்வதில்லை. உயிரற்ற நூல்கள் என்னுடன் உயிருள்ளனவாக அளவளாவியிருந்தன. ஆனால் நான் பிறருக்கு உயிரற்ற ஒரு கலைப் பிண்டமாகவே எண்ணப்பட்டேன். நான் எனது தம்பியை எவ்வளவுக்கு நம்பினேனே அதைவிட அதிகமாகவே என்னை அவன் மோசம் செய்யத் துணிந்துவிட்டான். அவனிடம் தினையளவாக மறைந்து கிடந்த தீமை பனையளவாக வளர்ந்துவிட்டது. நல்ல தந்தையர்கள் தம் தீய குழந்தைகளிடமும் அன்பும் பரிவும் காட்டுவதில்லையா? முன்னவனாகிய நான் என் பின்னவனிடம் தந்தையார் போலவே நடந்தேன். பொய்யினை நினைத்துப், பேசி அதில் திளைத்த ஒருவர், பின்னர் பொய்யிலே மிகுந்த நம்பிக்கை வைப்பது போல எனது பிரதிநிதியாக ஆண்டுவந்த பழக்கத்தால் ஓர் உறைப்பு ஏற்பட்டு நாளடைவில் தானே அரசனென்று எண்ணிவிட்டான். அரண்மனை முதலிய இடங்களைத் தன் சொந்தமாக்கினான். ஏவலர் அனைவரும் தனக்கே சொந்தமென உறுதி கொண்டுவிட்டான். அமைச்சர், சேனைத் தலைவர் யாவரும் அவனுடையவர் ஆயினர். வஞ்சி ஆட்சியில் எனக்குச் சிறிதும் உரிமை இல்லையாயிற்று. (நான் சொல்வது கேட்கின்றதா, மாலினி)

**மாலினி :—** அப்பா, தங்களுடைய நிகழ்ச்சி செவிடர்களையும் கேட்பிக்குமே, கொட்டும் கண் இமையையும் கொட்டாது நிறுத்தச் செய்யுமே. மேலும் கூறுங்கள்.

**சயசீலன் :—** எனது தம்பி உள்ளொன்று புறமொன்ருய் நடப்பதை முழுதும் விட்டான். உள்ளும் புறமும் ஒத்தவனாய் மறைமுகமாகச் செய்துவந்த சூழ்ச்சி அலுவல்

களையெல்லாம் வெளிப்படையாகவே செய்யத் தொடங்கி ஞன். வஞ்சியை நாகைக்குப் பணியவைத்தான். நாகைக் குக் கப்பம் கட்டிவரவும் உடன்பாடு செய்துகொண்டான். அதுகாறும் யாரையும் வணங்கியறியாத வஞ்சித் தாயை வணங்கவைத்தான். அடிமையாக்கிஞன். மரபைக் கெடுத் தான். நாங்கள் இருவரும் குணம் செயல்களால் முழுதும் மாறுபட்டவர்கள். நான் அவன் அண்ணன். இருவரும் ஒரு வயிற்றில் தோன்றியவர்கள். என்ன மாலினி, பிறப் பினை அறிபவர் யார்? தாயைத்தான் முதலில் உணர முடி கிறது. தாய் காட்டத்தான் தந்தையைக் காணலாம். என்ன விளங்குகின்றதா?

**மாலினி :—** போங்கள் அப்பா, உங்கள் தாயைப்பற் றிக் கூறினீர்கள். அது என் பாட்டியைப்பற்றிய குறை அல்லவா? நான் உங்கள் மகள். மகளிடம் பேசினீர்கள். நினைவோடுதானே பேசுகிறீர்கள். நல்ல நிலத்தில் நச்சுப் பூண்டு உண்டாவதில்லையா? அதற்கு நிலம் என்ன செய் யும்? தாயுலகைப் பழிக்க வேண்டாம். மேலே கூறுங்கள்.

**சயசீலன் :—** மாலினி, நீ என் ஞான மகள். ஞானத் தில் தர்க்கமும் தர்க்கத்தில் ஞானமும் உண்டாகும். நீ பிற ருக்கு விளங்காதனவெல்லாம் விளங்கிக்கொள்ளவேண்டும். விளக்கம் அடைவது ஞானத்தின் பயன் அல்லவா? உனக்கு வரும் பொறுப்புப் பெரிது. அதற்கு நீ தகுதி பெறவேண் டியே இவையெல்லாம் கூறினேன். பழிக்க அல்ல மாலினி. இன்னும் கேள். நாகையரசனைப் பேரரசனுக்கிஞன். சிற் றரசனின் குடிகளாகக்கூட நம்மை அங்கு வைத்துக்கொள்ள விரும்பவில்லை. ஒரு நள்ளிரவில் நம்மை வஞ்சியை விட்டு அகற்றிஞன்.

**மாலினி :** பாபிகளே, உங்கள் செயல் என் மனத்தில் தோய்ந்துவிட்டதே. என் கண்ணூற்றில் வெள்ளம் பெரு கும்போல் இருக்கின்றதே. இப்போது குழந்தையாக

இருந்தால்கூட நல்லதாகுமே, அல்லது அப்போதே பெரிய வளாயிருந்திருந்தாலும் அழுது தொலைத்திருப்பேனே ?

**சயசீலன் :—** மாலினி, கேள் ! இப்போது நீ கேட்ட கதையின் அவசியத்தைவிட இனி நடக்கவிருக்கும் செயல் தான் மிகவும் இன்றியமையாதது.

**மாலினி :—** அப்பா, அவர்கள் ஏன் அப்போது என்னை அல்லது நம்மைக் கொல்லவில்லை.

**சயசீலன் :—** நல்ல கேள்வி, இங்குதான் இரகசியம் இருக்கிறது. வஞ்சி மக்களில் பலர் நமது அழிவை விரும்பாதவராக இருந்தனர். எல்லாம் வெளிப்படையாகச் செய்துவந்த நமது எதிரிகள் இச் செயலைச் செய்யத் துணியவில்லை. நமது விருப்பத்தில் நம்மைக் கப்பலேற்றிக் கடலில் அனுப்புவதாகப் பாசாங்கு செய்தனர். தாயற்ற உன்னை ஒரு அடியற்ற உளுத்துப்போன படகில் வைத்து என்னுடன் கடலில் தள்ளிவிட்டனர். காற்றுக் குமுறியது. கடல் கொந்தளித்தது. நிலவு அமுதம் பொழிந்தது. நீ அழுதாய் ; நான் உளம் கரைந்தேன். நம் எதிர் விளைவால் காற்றும் நீரும் பெருந் துன்பம் அடைந்தன ; அமைதியுற்றன.

**மாலினி:—** ஐயோ, உங்கள் துன்பத்தை மிகுதிப் படுத்தவா நான் கூட இருந்தேன். என் தாயுடன் நானும் பிரிந்திருக்கக் கூடாதா ?

**சயசீலன்:—** மாலினி, அதனை மறந்துவிடு. நீ யொருத்தி இல்லாமல் இருந்தால் இந்த நிகழ்ச்சிகளுக்கெல் கெல்லாம் வழியேது ? நானும் அப்போதே பிரிந்திருப் பேனே. நீயே எனது உயிர்ப்பு. நீயே என்னை வாழவைத் தாய். கடலில் உள்ள உப்புப் போதும். உன் கண்ணீரால் உப்பை அதிகப்படுத்த வேண்டாம். அப்போது உனது புன்முறுவலும், விளையாட்டுமே எனது கவலையைப் போக்கி

ஊக்கத்தையும் உறுதியையும் தந்தன. இறுதியில் உனக்கு நன்மையே விளையும் என்ற நம்பிக்கையும் எனக்குப் பிறந்தது.

**மாலினி:—** நாம் எப்படிக் கடலிலிருந்து இத்தீவை யடைந்தோம்?

**சயசீலன்:—** கடவுளருளால் கோவிந்தமாறன் என்ற உற்ற நண்பனே நம் பகைவனால் நம்மைக் கடலில் தள்ளும் பணிக்கு ஆளாக்கப்பட்டிருந்தான். அந்நண்பனே அப்படகில் நம் பயணத்துக்குரிய உணவு, உடை, பணம் முதலிய பொருள்களுடன் என் உயிரினும், உன்னிலும் சிறந்த சில நூல்களையும் வைத்து அனுப்பினான்.

**மாலினி:—** அப்பா, அவரை நான் பார்க்க முடியுமா?

**சயசீலன்:—** இப்போது நாம் காரியம் பார்க்கவேண்டும். அதற்குமுன் கொஞ்சம் கேள். நாம் கரையடைந்த பின்னர் நான்தான் உனக்குத் தாய்மார், ஆசிரியன், தோழிகள், ஆதலால் மற்ற இளவரசிகளைவிட நீ மிகவும் பாக்கியசாலி. நானே மிகக் கவனமுள்ள வளர்ப்புத் தாயாகவும், மிக மிக அக்கரையுள்ள நல்லாசிரியனாகவும், சிறிதும் வீண் பொழுது போக்க வழிதராத தோழியாகவும் உன்னை வளப்படுத்தியிருக்கிறேன்.

**மாலினி:—** அப்பா, உங்கள் தந்தையார் உங்களை எப்படி வளர்த்தார் என்று நீங்கள் அறிந்திருப்பீர்களோ என்னவோ எனக்குத் தெரியாது. ஆனால் தாங்கள் எனக்காகப் பட்டபாடு உலகில் எந்தப் பெற்றோருக்கும் ஏற்பட்டிருக்காது. இந்த உண்மையை அறிந்தால் குழந்தை உலகம் தங்களைக் கொண்டாடும். பெற்றோருலகம் உங்களைச் சுற்றி வந்து வணங்கும். என் தெய்வமே, புயலைத் தாங்கள் கிளப்பியதற்குக் காரணம் நான் அறியவேண்டாமா?

**சயசீலன்:—** எல்லாம் அறிந்துகொள்ளலாம். விதியின் போக்குமட்டும் விளக்கமாக அறிவார் யார்? இதுகாறும்

எனக்கு மாருக இருந்த கோள்கள் இப்போதுதான் எனக்கு நேராக அமைந்திருக்கின்றன. எனக்குரிய நல்ல விண்மீனும் உச்சத்தில் அமைந்திருக்கின்றது. காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ள வேண்டும். இந்த நல்ல சூழ்நிலையில் ஆக வேண்டியவற்றை ஆக்கிக்கொள்ளாவிட்டால், எனது வாழ்வு குன்றிவிடும். புயலின் தோற்றம் எனது ஆக்கநிலையின் தொடக்கமாகும். இத்தீவுக்குள் எனது நண்பரும், பகைவரும் வந்து சேர்ந்திருக்கின்றனர். (மந்திரச் சட்டையை எடுத்துப் போட்டுக்கொண்டு — மாலினி முகத்துக்கு நேரில் கையை நீட்டிக்கொண்டு மேலும் கூறுதல்) இனிக் கேள்விகள் வேண்டாம். உனக்கு இப்போது தூக்கம் வரும். தூங்கு. தூங்கித்தான் ஆகவேண்டும். உன்ஞல் தூங்காமல் விழித்திருக்க முடியாது. (ஆகாயத்தைப் பார்த்து) தூங்கிவிட்டாள் காத்தவராயா! வா!

**காத்தவராயன்:—** ஐயா, கட்டளை முடிந்தது. மேலும் ஏதேனும் பணிகள் உண்டோ?

**சயசீலன்:—** சரியாக நிறைவேற்றிஞயா?

**காத்தவ:—** ஐயா, காற்றில் பரவி, நீரில் கலந்து, தீயில் சூழ்ந்து, முகிலில் இணைந்து, வானில் உலாவி ஒவ்வொன்றையும் என் விருப்பம்போல் வேலை வாங்குவேன். எனது சகாக்களும் எனது உளம்போல் வேலைசெய்பவர். ஆதலால் தங்கள் கட்டளையைச் சரியாக நிறைவேற்றினேன்.

**சயசீலன்:—** எங்கே சுருக்கமாகச் சிறிது கூறு.

**காத்தவ:—** புயலை உண்டாக்கினேன். அரசன் இருந்த கப்பலில் நுழைந்து முன்னும், பின்னும், இடையிலுமாக அதனைத் தத்தளிக்கச் செய்தேன். பாய், சுக்கான், கொடிமரம், மேல்தளம் ஒவ்வொன்றும் பிய்த்துக்கொண்டு போவதுபோலவும் தீப்பற்றி எரிவதுபோலவும் விளையாண்

டேன். யாவரும் நடுங்கினர். இறப்பினை அடைந்துவிட்டதாக எண்ணினர் பலர். சிலர் தீயிலிருந்து தப்ப எண்ணிக் கடலில் குதித்தனர். சிலர் அறிவு மயங்கி அங்குமிங்கும் ஓடித் தண்ணீரில் விழுந்தனர். ஆனால் முதலில் தீக்குப் பயந்து நீரில் குதித்தவர் வீராசேந்திரன்தான். அவர் தீக்குத் தப்புங்கள் என்று அலறிக்கொண்டே குதித்தார். மற்ற இரண்டு கப்பல்களையும் நன்கு குலுக்கிவிட்டேன்.

**சயசீலன்:**— உயிர்ச்சேதம் நிகழ்ந்திருக்காதே?

**காத்தவ:**— கரையோரம்தான்; அவர்களுக்குத் தெரிந்திருக்காது. ஒருவர்கூடச் சாகவில்லை. ஒருவருக்கும் தீங்கும் இல்லை. ஒரு பொத்தானைக்கூட ஒருவரும் இழக்கவில்லை. ஆழமில்லாத இடத்தில் அவர்களின் உடைகளே அவர்களுக்கு மிதவைகளாக இருந்தன. உப்பு நீரால் அவர்களின் உடையழுக்கும் நீங்கி அவர்களும் சுகமாக இருக்கின்றனர். தாங்கள் கூறியபடி வீராசேந்திரனைத் தவிர வனையோர் தனித்தனி இடங்களில் மும்மூன்றுபேராகப் பிரிந்திருக்கும்படி செய்துள்ளேன். வீராசேந்திரன் மட்டும் தனியாக அண்மையில்தான் உள்ளார். தனியாக இருப்பதால் அடிக்கடி பெருமூச்சு விட்டுக்கொண்டு துன்புறுகிறார். ஆனால் மீகான், மாலுமிகள் யாவரும் களைப்பால் அவரவர் இடத்திலேயே தூங்கி விழித்துத் தத்தம் கப்பல்களை நாகை நோக்கிச் செலுத்திவிட்டனர். ஆனால் அவர்கள், அரசனது கப்பல் முன்னாலேயே நாகை சென்றிருக்கும் என்று நம்பியே சென்றுவிட்டனர். நானோ அரசனது கப்பலை ஒரு நல்ல முடுக்கில் அடைத்து வைத்திருக்கிறேன். கப்பல் சேதமின்றி இருக்கிறது.

**சயசீலன்:**— கூறியவற்றைச் சரியாகத்தான் செய்து முடித்திருக்கிறாய். ஆனால் இன்னும் செய்யவேண்டியன பல உண்டு. மணியென்ன?

**காத்தவ:**— நடுப்பகல்தான். இருந்தாலும் இனி இறங்குபொழுதுதான்.

**சயசீலன்**:— நடுப்பகலா? மணி இரண்டிருக்கலாம். மாலை ஆறு மணிக்குள் இன்னும் அருமையான காரியங்கள் பல முடித்தாகவேண்டியுள்ளன. என்ன காத்தவா! தெரிகிறதா?

**காத்தவ**:— இன்னும் அதிகமான வேலையா? மிகவும் துன்பமானதாகக்கூட இருக்குமோ? ஐயா, எனக்கு எப்போது விடுதலை? (தனக்குள் முணுங்குகிறான்)

**சயசீலன்**:— வேலையில் சலிப்பா? செய்யவேண்டிய அலுவல்கள் இன்னும் இருக்கும்போது அதற்குள் விடுதலையா? வேலையில் ஊக்கமும் உவப்பும் தோன்றி உனது திறமையை நீ உணர்வதற்குமுன் விடுதலை கேட்கலாமா?

**காத்தவ**:— மன்னியுங்கள். தங்களை நம்பித்தான் நான் வேலைகளைச் செய்துவருகிறேன். தங்கள் மனதுக்குத் தெரியும் என் வேலைகளில் பிசகில்லை என்பது. பொய் சொன்னதில்லை, தங்களுக்கு இரண்டகம் நினைக்கவில்லை, முணுமுணுத்ததில்லை. ஒரு ஆண்டுக்கு முன்னரே விடுதலை தருவதாக வாக்குத் தந்தீர்களல்லவா? அதை நினைவூட்டுகிறேன்.

**சயசீலன்**:—நான் குறித்தகாலம் ஆய்விட்டதா? அதனை நீ மெய்ப்பிக்க முடியுமா? அதற்குள்ளேயா விடுதலை? நான் வருவதற்கு முன் நீ எப்படியிருந்தாய் என்பது மறந்துவிட்டாயா? இத்தீவில் குளிர்காற்று. சுற்றி உப்புநீர், இவையெல்லாம் உனக்கு எப்படிப் பிடிக்கும்? அட்டையைப் பிடித்து மெத்தையில் வைத்தால் சுகம்பற்றிச் சொல்ல வேண்டுமா? இப்போது நீ என்ன பனிக்கட்டியை உடைக்கிறாயா? பூமியைக் குடைகிறாயா? என் வேலைக்குச் சோம்புகிறாய்?

**காத்தவ** :— எனக்கு அவையெல்லாம் பெரிதல்ல. எளிதாகச் செய்து முடிப்பேன். விடுதலையில்லாக் குறையை என்னால் சுமக்க முடியவில்லை. சுமை இறங்கி விடுதலை பெற்றால் எதையும் இலகுவாகவும், இன்பமாகவும் செய்வேன்.

**சயசீலன் :—** காத்தவா, இந்த ஊரில் இருந்தாளே கூனி, வயதாலும், பொருமையாலும் வளைக்கப்பட்ட உடம்புடன், அவளை எண்ணிப்பார். அவள் எங்கே பிறந்தவள் ? உன்னை என்ன செய்திருந்தாள் என்பதைச் சொல்லு.

**காத்தவ :—** அவள் நேபாளத்தில் பிறந்தவள்.

**சயசீலன் :—** உனக்கு நினைவிருக்கிறது. அவள் உன்னை என்ன செய்தாள் என்பதற்குமுன் இங்கு எப்படி வந்தாள் என்பதை நினைவுகொள். அவள் அங்கு ஒரு சூனியக்காரியாய்த் தீச்செயல்களையே செய்துவந்தாள். மக்கள் இனம் வாழும் இடத்தில் அவள் இருத்தல் தகாதென்றே மக்களற்ற இத்தீவில் அவள் விடப்பட்டாள். இது உண்மை தானே ?

**காத்தவ :—** ஆமாம், முழுதும் உண்மைதான்.

**சயசீலன் :—** அந்தப் பாவி பூனைக்கண்ணி, இங்கு வந்தபோது கர்ப்பிணி. அவள் உன்னை அடிமைப்படுத்தி வேலை வாங்க முயன்றாள். முடியவில்லை. இருவரது இயல்புகளும் எந்த வகையிலும் பொருந்தவில்லை. பொருந்தாத இருவரும் ஒன்றி வாழ முடியவில்லை. மக்கள் விரும்பாத கீழ்த்தரச் செயல்கொண்ட அவளுடன் ; பருவுடலும் நுண்ணுடலும் பெற்று மக்களினும் மேற்பட்ட சக்தி பெற்றிருப்பினும் எண்ணுதல், செய்தல் முதலிய மனத்திறனும், வினைத்திறனும், பிற பண்பாடும் அற்ற நீ கூடியிருக்க முடியவில்லை. உனது போக்கு அவளுக்குப் பிடிக்கவில்லை. அவளது கட்டளையை நீ நிறைவேற்றவில்லை. அவளுக்குக் கோபம் வந்தது. மக்கள் கோபம் அவளை இங்கு அனுப்பியதுபோல அவளது கோபம் உன்னை ஒரு வயிரம் பாய்ந்த மரத்தினுள் மூடிவைத்தது. மரப் பிளவில் அகப்பட்டுக் கொண்டு வலிபொறுது பன்னிரண்டு ஆண்டுகள் நீ துன்புற்றாய். அப்போதுதான் நான் இங்கு வந்தேன். அதற்கு முன் இத்தீவில் அச்சூனியக்காரி, அவள் போட்ட குட்டி,

நீ, மூவரும்தான் இருந்தீர்கள். சில பொழுதுகளில் அவள் இறந்துவிட்டாள். நினைவிருக்கிறதா?

**காத்தவ :—** நன்ருக நினைவிருக்கிறது எனக்கு. அந்தக் கலியன்கூட மறந்திருப்பான் அவன் தாயை. எனக்கு நினைவிருக்கிறது.

**சயசீலன் :—** அந்தக் கூனியின் மந்திரமெல்லாம் தீமை செய்தலைத் தவிர நன்மை செய்யும் ஆற்றல் இல்லாதது. அவளே உன்னை மரத்திலிருந்து மீட்க நினைத்திருந்தாலும் முடியாது. அவள் கோநாயை உறுமும்படியும், கரடியை ஊளையிடும்படியும் செய்துவிடுவாள். ஆனல் அதை முன் போல் மாற்றவோ பிறருக்கு நல்லன செய்யவோ அவள் மந்திர சக்தி உபயோகப்படுவதில்லை. ஆதலால் அவள் எப்படி உன்னை மீட்க முடியும்? நான்தான் மரத்திலிருந்து விடுவித்தேன். நான் சொல்வது சரிதானே?

**காத்தவ :—** முற்றிலும் சரிதான். நான் ஒருநாளும் மறவேன். எனது நன்றி.

**சயசீலன் :—** ஏதாவது பிணக்குச் செய்தால், பூவரசல்ல அசல் புளிய மரம்தான். பிறகு எத்தனை மகாமகங்களோ? முணுமுணுப்பு வேண்டாம். தெரிகிறதா?

**காத்தவ :—** இல்லை ஐயா, தாங்கள் இடும் பணிகளை உடனுக்குடன் செய்து முடிப்பேன்.

**சயசீலன் :—** இன்னும் இரண்டு நாட்கள்தான். பிறகு உனது பெயருக்கேற்ப உன் விருப்பம்போல் விடுதலை பெற்றுத் திரியலாம்.

**காத்தவ :—** ஐயா, எனது தலைவரே, இப்போது என்ன செய்யவேண்டும்? தங்கள் உத்தரவு எனக்குத் தெரியவில்லையே? கூறுங்கள் உடனே செய்வேன்.

**சயசீலன்:—** உருவம்மாறு. பெண்ணுருவம்கொள். கலைமகளாய் — மலர்மகளாய் வரவேண்டாம். அலைமகளாய் வா. பிறர் கண்ணில் படாதே. எனக்காக உன்னை அவ்வாறு அழைத்ததாகவும் எண்ணுதே. போ.

(காத்தவராயன் போகிருன்.)

**சயசீலன்:—** (மாலினியைப் பார்த்து) மாலினி விழி. தூக்கம் விட்டுவிட்டதா? நன்ருய் விழித்துக்கொள். கலியனைப்போய்ப் பார்ப்போம். மூதேவிப் பயல், நாம் சொன்னல்தான் ஏதாவது செய்வான்.

**மாலினி:—** அப்பா. தாங்கள் சொன்னகதை எனக்குத் தூக்கத்தை வளர்த்து விட்டது. விழித்துக்கொண்டேன். அக்கலியனைப் பார்க்க எனக்குப் பிடிக்கவில்லை.

**சயசீலன்:—** மாலினி, அவனைப் பிடிக்காவிட்டாலும், அவன் நமக்குச் செய்யவேண்டிய வேலை அதிகம் உண்டு. அவன் இல்லாமல் முடியாது. அவனல் நமக்கு இலாபமே தவிர இழப்பு ஒன்றுமில்லை. வீடு மெழுகல், திண்ணை கழுவல், விறகு வெட்டல் இக்காரியங்களை வேறு யார் செய்வர்? ஏ, கலியா! கலியா! ஆமைபோல் ஊறுகிருயா? மண்ணோடாவது மாறிடிக்கலாம். உன்னோடு போர் எடுக்க யாரால் முடிகிறது.

**கலியன்:—** வீட்டுக்குள் சிதையடுக்குவதுபோல விறகெல்லாம் அடுக்கிவிட்டேன். இன்னும் நான் வேறென்ன செய்யவேண்டும்?

**சயசீலன்:—** மடையா வேறு வேலை யிருக்குதடா. (அதற்குள் பெண்ணுருவுடன் வந்த காத்தவராயன் காதோடு ஏதோ சொல்லியனுப்பினன்.) இப்படி வா சைத்தான் குட்டி. உன்னையொருத்தி போட்டாளா வேலையற்றுபோய், வீட்டு வேலைகள் அப்படியே கிடக்குதடா.

**கலியன்:—** (தனக்குள் சயசீலனை வைகிறான்.) என் ஆத்தாள் கூனி பிழைத்துவந்து பாழுங் குளத்திலுள்ள பாசிகளையெல்லாம் உன் தலையில் கொட்டட்டும். உன் உடம்பு இடி விழுந்து விரியட்டும். மின் ஒளி உன் கண்ணைக் கெடுக்கட்டும். நான் இப்போது ஒரு வேலையும் செய்யப் போவதில்லை.

**சயசீலன்:—** என்னடா ஆலோசனை? இன்று இரவு இதற்கெல்லாம் பலன் கிடைக்கும். கை கால்கள் இழுத்துக் கொள்ளும். மூச்சுவிடத் திணறும். கிள்ளுப்படுவாய். கொட்டுப் படுவாய்.

**கலியன்:—** இரவில் எது நடந்தாலும் சரி. நான் இப் போது சாப்பிட்டுத்தான் ஆகவேண்டும். எனது அம்மாள் கூனி இத்தீவை என்னிடம்தான் ஒப்பித்துச் சென்றாள். உம்மிடம் இல்லை. அவள் இத்தீவை என்னிடம் தந்து எத்தனையோ மந்திரங்களையும் எனக்குக் கற்பித்துச் சென் றாள். ஆனால் நீர் இத்தீவில் என்னை முதலில் சந்தித்த போது என்னை அணைத்து முதுகில் தட்டிக்கொடுத்துப் புகழ்ந்து பேசினீர். நீரில் பழச்சாறு கலந்து குடிக்கச் செய்தீர். பெரிய வெளிச்சத்துக்குச் சூரியன் என்றும், சின்ன வெளிச்சத்துக்குச் சந்திரன் என்றும், இன்னும் பல செய்திகளை எனக்குக் கற்பித்தீர். அதனால் நான் உம்மை மிகவும் மதித்தேன். இத்தீவின் இரகசியங்களையும், மூலை முடுக்குகளில் இருந்த சுனைகள், உப்பளங்கள், நஞ்சை நிலங்கள் யாவற்றையும் காட்டினேன். இன்னும் என் தாய் கூறிப்போன பல மந்திரங்களையும் உமக்குக் கூறினேன். தேரை, வண்டு, எலி யாவும் உம் மந்திரத்தால் உமக்குத் தொண்டு செய்யும். உம்மை நான் ஒரு சூனியக்காரராகவே ஆக்கிவிட்டேன். அதற்குப் பலனாக நீர் என்னை அடிமை யாக்கி வேலை வாங்குகிறீர், மந்திரம் தெரிந்தும் அறிவில் லாததனால்தான் எனது நிலை இப்படி இருக்கிறது. இருந் தாலும் உமக்கென்ன பெருமை இருக்கிறது. இச்சிறு தீவு

தான் உமது அரசாங்கம். நான் ஒருவன்தான் குடிமகன். ஒரு அரசனுக்கு ஒரு குடிமகன். ஒரு குடிமகனுக்கு ஒரு அரசன். இதில் உமக்கென்ன சிறப்பு. எனக்கென்ன குறைவு. நீர் வருவதற்கு முன் நானே அரசனாய் நானே குடிமகனாய் இருந்தேன். நான் சுவை பார்த்த—ஆண்ட—தீவில்தான் நீர் இன்று அரசனாக இருக்கிறீர். இப்பாராங் கல்லில் சிறிது ஓய்வெடுத்துக்கொண்டு பிறகுதான் சாப்பிடப் போகவேண்டும். நீர் என்ன செய்தாலும் ஓய்வெடுத்துத் தான் தீருவேன்.

**சயசீலன்:—** எனது இரக்கம் உனக்கும் நல்லது செய்யாது, எனக்கும் நல்லது செய்யாது. உன்னைப் பொறுத்த வரையில் இச் சாட்டைதான் உனக்குக் கடமை, கீழ்ப்படிதலைக் கற்பிக்கும் நல்லாசிரியன். உன்னை நான் மனிதனை நடத்துவதுபோல் நடத்த எண்ணி, எனது வீட்டிலே இடம் தந்து நன்கு நடத்தினேன். நீ அதன் கைமாருக என் மகளைக் கற்பழிக்க முயன்றாய். கடமையை உணரவில்லை.

**கலியன்:—** ஐயா, அந்தக் காரியம் நடந்திருந்தால் இத் தீவில் என்னைப்போன்ற குட்டிக் கலியன்கள் தங்கள் குடிமக்களாக விளங்குவார்கள். நீர் உண்மை அரசனாக அரசு செலுத்தலாம் அல்லவா?

**சயசீலன்:—** சீ உனது இயல்பு சிறிதும் மாறவில்லையே. உனக்கு நல்லனவே மனதில் படியவில்லையே. உன்னைக் கண்டு நான் முதலில் இரங்கினேன். பேசக் கற்றுக் கொடுத்து நல்ல பொருள்களையும் கற்பித்தேன். உன் குரலும், உன் பொருளற்ற ஒலியும் எனது முயற்சியால் மாற்றியமைக்கப்பட்டன. எனினும் உன் இயற்கைக் குணத்தை என்னால் மாற்ற முடியவில்லையே?

**கலியன்:—** ஆமாம் நீர் எனக்குப் பேசக் கற்றுக் கொடுத்தீர். எனக்கு நன்றாக உம்மை வையத் தெரிகிறது.

உமக்குக் காளியருள் செய்யட்டும்; களிச்சல் வரட்டும்; உமக்கு ஆயிரம் கண்ணுள் அருளட்டும்; அம்மை போடட்டும். மொழி சொல்லிக் கொடுத்தாராம். இல்லாவிட்டால் நான் செத்துப் போயிருப்பேனே?

**சயசீலன்:—** சீ வாயை மூடு. ஓய்வு, சாப்பாடெல்லாம் வேலை முடிந்த பிறகுதான். அதிக வேலைகள் இருக்கின்றன. ஓடு, முதலில் பாக்கி விறகையும் எடுத்து அடுக்கு. வேலை பாக்கியிருந்தாலும், விருப்பமில்லாமல் செய்தாலும் உடம்பு புண்ணுகிவிடும். இதோபார் சாட்டை.

**கலியன்:—** ஐயோ, வேண்டாம். எல்லாம் செய்து தொலைக்கிறேன். (மனத்துள்—என் நெஞ்சைவிட இவன் நெஞ்சம் வலியுடையது. என் சாமியைவிட இவன் சாமியும் வலிமையுடையதுதான் போல் இருக்கிறது. இவன் சாமியையும் இவனையும் அடிமையாக்கக்கூடிய வேறொரு கொடிய சாமியை நாம் கண்டுபிடித்துக்கொள்ள வேண்டும்.)

**சயசீலன்:—** ஏண்டா இன்னும் போகவில்லையா? என்ன சிந்தனை?

(கலியன் போதல்—காத்தவராயன், பாட்டின் ஒலி மட்டும் கேட்கும்படி பாட்டுடன் தோன்றுதல்—வீராசேந்திரன் பாட்டின் ஒலியைக் கேட்டு அவ்வொலியின் பின்னே தொடர்தல்)

**பாடல்:—**

செய்த பாவம் தீர்ந்ததென்று சேர்ந்து நேர்ந்து
ஆடுவோம்
கையைக் கோத்துக் கொள்ளுவோம் கடைக்கண்
பார்வை கொள்ளுவோம்
மரங்களோட அலைகளாட மாருதங்கள் கூடப்பாடச்
சுற்றி சுற்றி ஆடுவோம் சுழற்றி மாலை வீசுவோம்

(வீராசேந்திரன் வருகைக்கு இப்பாடல் நுழைவுப் பாட்டாகவும் ஆகிறது. மாலினி இருக்குமிடத்துக்கு அவ்வொலி வருகிறது)

வீரராசே:— ஆ இந்த இனிய ஒலி—பொருள் நிறைந்த பாடல்—எங்கிருந்து வருகிறது? வானவீதியிலிருந்தா? பூமியிலிருந்துதானு? நின்றுவிட்டதே. பெண் குரல்தான். இத்தீவின் தெய்வம் பெண்தான். அவளது பாடலாகவே இருக்கலாம். நாகையை — என் தந்தையை — எண்ணிக் கொண்டிருந்த என் துக்கவுள்ளத்துக்கு இவ்விசை மருந்தா? மாற்ரு? கொந்தளித்த கடல் இப்போது அமைதியாகத் தோன்றுகிறது. துக்கத்தால் குழம்பிய என் உள்ளமும் இப்போது அமைதியாக உள்ளது. நான் எங்கிருந்து எங்கு வந்தேன்? இசையொலி என்னை இங்கு இழுத்துவந்து நிறுத்தியதா? நானே அதனைத் தொடர்ந்து வந்தேனே தெரியவில்லையே? ஒலி கேட்கவில்லையே? இதோ! இதோ! கேட்கிறது.

பாடல்:—

கடற்பவளம் நுந்தையின் கனவெலும்பு அல்லவே
கெட்டிமுத்து நுந்தையின் வட்டக்கண் பல்லாகுமோ
அங்கபங்கமில்லையே அனைத்து மாற்றம் விந்தையே
ஐந்துபாக ஆழத்தில் நுந்தைதூக்கம் காண்பையோ

வீரராசே:—இசை என் தலைக்குமேல் கேட்கிறது. இதன் பொருள் என் தந்தையாரைப் பற்றியது. அவர் ஆவியே இவ்வாறு என் உச்சியில் நின்று சகுனமாகிறதா? ஐயோ இதன் விளைவு என்னவாகுமோ? இவ்விசை மக்களின் இசையாக வில்லையே! தெய்வ இசையாக என்னை உருக்குகின்றதே. அப்பா அப்பா! தங்களைப்பற்றி எனக்கு ஒன்றுமே விளங்கவில்லையே. என்னைப்பற்றியும் எனக்கு ஒன்றும் உணரமுடியவில்லையே.

(மாலினி—சயசீலன் உரையாடல்)

**மாலினி:—** அப்பா, அது என்ன? நம்மைப்போலவே இருக்கிறதே? நமக்கு மேலாகவும் தோன்றுகிறதே? தெய்வமா?

**சயசீலன்:—** கண்ணில் திரைபோட்டுக்கொண்டு பார்க்கிருயா? கண்களை இலேசாகத் துடைத்து மூடிப் பின் திறந்து உற்றுப்பார். அது நம்மைப் போன்றதுதான். உண்ணும், உறங்கும். நம்மைப்போன்று ஐயறிவும் அதற்கு உண்டு. நேற்று உடைந்ததாக நீ கவலைப்பட்ட கப்பலி லிருந்து வந்த ஒரு மனிதன். பூவின் அழகைப் புழு அரிப் பதுபோல அவர் அழகு அவரது துக்கத்தால் சிறிது அரிக் கப்பட்டுள்ளது. தன் இனத்தவரைத் தேடித் திரிகிருர். அவர் மனிதர்தான்.

**மாலினி:—** நான் இவரைத்தான் முதலில் பார்த்தேன். அழகிற்கும் இவர்தான் முதலாக இருப்பார் என நம்பு கிறேன்.

(சயசீலன் தனக்குள் எல்லாம் முறைப்படி நடக்கத் தொடங்கிவிட்டது ஒருபுறமாகக் காத்தவராயனைப் பார்த்து விடுதலைபெற உனக்கு இன்னும் ஒரே பொழுது தான் இருக்கிறது)

**வீரராசே:—** துக்கத்தின் முடிவு இன்பம். எனது துக் கத்தை இசை மாற்றியது. இங்கு அழைத்துவந்து இவ்வழ கின் கருவூலத்தின் முன் — இன்பவூற்றின் முன் என்னை நிறுத்தியது. இவ்விசை விண்மகளால் எழுப்பப்பட்ட தல்ல. விதிமகளின் காப்புச் செய்யுளின் இசையாகும். இத்தீவில் இத்தெய்வம் ஏன் இருக்கிறது? தெய்வமே, என் விண்ணப்பத்தைச் செவிமடுப்பாயா? எனது வினைக்களுக்கு விடை வேண்டும். அவ்வளவுதான். இத்தீவே தங்கள் இருப்பிடமா? வேறு எங்கிருந்தாவது நான் வந்து சேர்ந்

தது போலத் தாங்களும் வந்தீர்களா? தங்களிடத்தில் நான் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும்? அசட்டுத்தனமாக நான் என்னென்னவோ கூறிவிட்டேன். அவற்றை மறந்து விட்டு எ அதிசயமே, தாங்கள் தெய்வப் பெண்ணு? மானிடப் பெண்ணு என்பதற்கு மட்டும் விடை வேண்டுகிறேன்.

**மாலினி:—** நான் அதிசயமல்ல. பெண். நும்போன்று மானிட இனத்தவளே தான்.

**வீரராசே:—** ஆ, என் இனம். பேசுவதும் எம் தாய் மொழி. எனது மகிழ்வை, பூரிப்பைப் பிறர் காணுவதைவிட என் ஆத்மாவே காணட்டும். எம்மவர் நடுவில் எம் தாய் நாட்டில் இவ்வுரையாடல் எம் தாய் மொழியில் நிகழ்ந்தால் மக்களின் கற்பும், காதலும், பண்பும் பெருகும். நாடே அகப்பொருள் முறையுடன் வளர்ச்சியடையும். நானே தலை வன் என்ற நம்பிக்கை உண்டாகிறது. தெய்வத் தலைவிமுன் பேசும் நான் தலைவனாக ஆவது; இருப்பது; எப்படித் தவறும்?

(சயசீலன் தனக்குள் – வீரராசேந்திரன் அரண்மனையி லிருந்தால் மாலினிக்குத் தன்னை ஒளித்துத் தனது இடம், பொருள், ஏவல் முதலிய காட்டிக் காதலனாக எண்ணுவான், ஒன்றுமற்ற இத்தீவில் தன் உள்ளத்தைக் காட்டமுடிகிறது.)

**சயசீலன்:—** ஐயா, நீர் தலைவரென்றால் எப்படி? நம் வீட்டுக்கா? நாட்டுக்கா? உமக்குத் தந்தையார் இல்லையா? இருந்து கேட்டால்?

**வீரராசே:—** இரண்டிற்கும் தான். என் தந்தையார் நாகையரசர். புயலால் அவர் கடலில் மடிந்தார். இருந்து கேட்டால் எனக்கு மிகவும் மகிழ்ச்சி. இல்லையே என்பதற் காகத்தான் அழுகைகூட வருகிறது.

**மாலினி:—** கடவுளே, எம்மைப்போல் அவருக்கும் தந்தையிருக்கக்கூடாதா?

**சயசீலன்:—** புயலால் உம் கப்பலே அழிந்துவிட்டதா? உம்மைத் தவிர யாவருமே அழிந்துவிட்டார்களா?

**வீரராசே:—** எம் தந்தை, வஞ்சிப் பிரபு ........ ஐயோ அனைவருமே கப்பலுடன் மூழ்கிவிட்டனர். நான் இங்கு வந்ததுபோலவே கரைசேர்ந்ததும் விந்தையாக இருக்கிறது. நான் வீரராசேந்திரன்.

(சயசீலன் தனக்குள் — இவர்கள் தொடர்பு இலகுவில் கிடைத்துவிட்டது. இலகுவில் கிடைத்த எந்த அரிய பொருளும் இலகுவில் நழுவினும் நழுவலாம். ஆதலின் இவர்களின் காதலின் வளர்ச்சியைச் சிறிது கடினமாக்கிப் பிணைக்க வேண்டும்.)

**சயசீலன்:—** உன் வார்த்தைகளால் உன்னை மறைத்துக்கொள்ளுகிறாய். உன் காதல் நடிப்பில் உன் கருத்தை மூடுகிறாய். பல உருவங்களில் நீ நடிக்கக் கற்றிருக்கிறாய், என்றாலும் உன் மூல உருவம் எனக்கு விளங்காமல் இல்லை. நீ இத்தீவுக்கு வேவு பார்க்கவந்த வேவுகாரன். என் வாழ்வை முடிக்க வந்த வஞ்சகன். இத் தீவையும் என்னிடமிருந்து பிடுங்கிக்கொள்ள ஏதோ சூழ்ச்சி நடந்திருக்கிறது.

**வீரராசே:—** இல்லை; இல்லை; நான் ஒன்றுமறியேன். இதைத்தவிர நான் தங்களிடம் சொல்லக்கூடியது ஒன்றுமில்லை.

**மாலினி:—** அப்பா, இவ்வளவு அழகிய உடலில் பொய், சூது குடிகொள்ளுமா? குடிகொள்ள வாய்ப்பு ஏற்பட்டாலும் உண்மைக் காதலும், உறுதியும் அவற்றை உள்ளே நுழைய விடுமா? அழகிய கோயில், அருமை உருவம். அங்கு தீமை இருக்கவே முடியாது.

**சயசீலன்:—** மாலினி, உனக்கென்ன தெரியும்? உலகம் உன் அனுபவத்தில் இரண்டு ஆட்களையுடையது. உனக்கு

என்னைத் தெரியும். இவனை இன்று கண்டாய். அவ்வளவு தானே, நீ குறுக்கே பேசாதே. வீரராசேந்திரா வா இங்கே. நீ ஒரு வேவுகாரன். நீ நேர்முறையில் வந்திருந்தால் உன்னைத் துன்புறுத்தல் அறமன்று. நீ காதல் நாடகத்தில் வந்த கயவன். ஆதலால் உன் கால்களிலும் கைகளிலும் தளையிட்டுக் குடிப்பதற்கு உப்பு நீரும் கடித்துண்ண வேர்களும் தான் தருவேன்.

**வீரராசே:—** எல்லை கடந்துவிட்டது. எனது பகைவராகக் கணப்பொழுதில் மாறிவிட்டீர். மானமழியுமுன் சாவதா, அல்லது வாழ்வதா என்ற போராட்டத்தில் நான் வாழ்வதற்கு ஒரு காரணம் தோன்றிவிட்டது. என்னைவிட நீவிர் பலமுள்ளவர் என்பதை மெய்ப்பிக்குமுன் நான் உமது கட்டளைக்கு இணங்கேன். கத்தியை எடுத்துக்கொள்ளுங்கள். (கத்தியை உருவினான்)

**சயசீலன்:—** சீ, நீ ஒரு மனிதன்; உனக்கொரு கத்தி; உன்னிடம் ஒரு வாட்போர். பேடிப்பையா, உன் கத்தி காரியத்துக்குதவாதது. உன் கையும் கத்தியை வீசாது. இதோபார் இக்குச்சி அவ்வாளினை முறித்துவிடும். உறையினில் அதனைப் போடு. அதனையும் கெடுத்து நீயும் கெட வேண்டாம்.

**மாலினி:—** தந்தையே வேண்டாம், அவருக்கு ஒரு தீங்கும் செய்துவிடாதீர்கள். தக்க காரணம் எதுவுமின்றி ஏன் இவ்வாறு செய்கிறீர்கள்? அவருக்குக் கேடுசெய்தால் அது என்னையும் பற்றுமப்பா.

**சயசீலன்:—** வெறி தலைக்குமேல் ஏறிவிட்டதா? கால் தலைக்குப் புத்தி கூறுகிறது, நீ எனக்கு எதிர்கால நிகழ்வை எடுத்துக்கூற முற்பட்டுவிட்டாய்.

**மாலினி :—** தங்கள் மனம் மாறவேண்டும். நான் கெஞ்சுகிறேன். எனக்கு வேறு யார் இருக்கிறார்கள்?

இழிந்த பிறப்பினன், கலியனுக்கு என்ன தெரியும்? உங்களைத் தவிர வேறு யாரிடம் நான் வேண்டுவது?

**சயசீலன் :—** நான் கிழவன். மற்றொருவன் கலியன்; அவன் மானிடனே அல்லன். எங்களைத் தவிர வேறு ஒருவரையும் நீ பார்க்கவில்லை. ஆதலால்தான் இவன் உனக்கு மன்மதனாகத் தெரிகிறான். உலகில் எத்தனையோ அழகுடையவர்கள் இருக்கிறார்கள். உன் எண்ணத்தை மாற்றிக்கொள். இத்துரோகியை மறந்துவிடு.

**மாலினி :—** அப்பா, அதிக அழகுள்ளவர் எனக்கு வேண்டாம். இவருடைய அழகே எனக்குப் போதும். இவர் துரோகியல்லாதிருக்கும்போது நான் எப்படி அவரை மறப்பேன். ஊழால் உண்டான எண்ணத்தை எப்படி மாற்றுவது? எண்ணும்போதெல்லாம் அது உறுதிப்படுகிறதைத்தான் நான் அறிகிறேன்.

**சயசீலன் :—** வீராசேந்திரா, இப்படி வா. நான் இடும் கட்டளையைச் செய்ய ஒத்துக்கொள். கீழ்ப்படி. உனது உயிர்கான் கீழ்ப்படியலாம். உன் உறுப்புக்களுக்கு இப்போது சக்தியில்லை. அசைக்கக்கூட முடியாது. இந்த அளவில் உன்னை மன்னித்தேன். இதோ பார் குச்சி (நடுங்குகிறான் வீராசேந்திரன்) அஞ்சாதே. பணிந்து நட. அதுதான் உன் நோய்க்கு மருந்து.

**வீராசே :—** நான் ஏதோ கனவு கண்டதுபோல் தோன்றுகிறது. எனது உறுப்புக்கள் ஒவ்வொன்றும் சொரணை அற்றுக் கிடக்கிறது. கால் கைகளை அசைக்கக்கூட முடியவில்லை. எனது பரிதாப நிலை, எனது தந்தையாரின் சாவு, என் உற்றார் உறவினரின் இழப்பு, நீர் செய்யும் கொடுமை யாவற்றையும் என்னால் பொறுக்க முடிகிறது. ஒரு நாளைக்கு ஒரு தடவையாவது இப்பெண்தெய்வத்தைக் காணலாம் என்ற நம்பிக்கைதான் இப்பொறுமையைத் தந்

தது. ஐயா, தாங்கள் என்னை எதற்கு வேண்டுமானாலும் ஆளாக்கிக்கொள்ளுங்கள், பழி சுமத்துங்கள், சிறையில் அடையுங்கள், நாகையை யார் வேண்டுமானாலும் ஆளட்டும். எந்தப் பகுதியை யார் ஆண்டால் எனக்கென்ன? நான் வேண்டுவதெல்லாம் இந்த அம்மையின் காட்சிதான். நான் யாருக்கு அடிமையாயிருந்தாலும் குறைவில்லை. இவ்வம்மையைப் பார்க்கும் சுதந்திரம் மட்டும் எனக்குக் குறையாமல் நிலைக்கவேண்டும்.

(சயசீலன் தனக்குள் சோதனையில் இருவரும் தேறினர். ஒருபுறம் காத்தவராயனைப் பார்த்து — நீ விரைவில் விடுதலையடைவாய், ஆனால் இன்னும் இரண்டொரு கட்டளையைச் சரியாகச் செய்.)

**மாலினி** :— அன்பரே, என் தந்தையார் இயற்கையில் பொல்லாதவரல்லர். இதுகாறும் அவர் இவ்வாறு பேசியதும் இல்லையே.

**சயசீலன்** :— வீராசேந்திரா, வா என் பின்னால் — மாலினி நீ போ. இனி இவனுக்குப் பரிவு காட்டிப் பேசாதே.

---

## அங்கம் 2. களம் 1.

தீவின் மற்றொருபுறம் — இராசேந்திரன் — இராசசிம்மன் — அமணன் — கோவிந்தமாறன் — ஆதிநாராயணன் — பராந்தகன் இவர்கள் தோற்றம்.

**கோவிந்த** :— (அமணனைப் பார்த்து) வருத்தம் வேண்டாம். நாம் யாவருமே உயிர் பிழைத்தோம். உயிரை விடவா உயர்ந்த பொருள் உலகில் இருக்கின்றது? உயிர்

தப்பியதே நாம் மகிழக் காரணமாக உளது. தாங்கள் ஏன் வருந்துகிறீர்கள்? கப்பலிலே இருந்தோம் கவலைப்பட வேண்டியதுதான். 'கப்பல்காரன் பெண்டாட்டி தாலியைத் தொட்டுத் தொட்டுப் பார்ப்பாளாம்' என்பார்கள். இப்போது கரையடைந்தோம். உயிருடன் இருப்பது, கரையடைந்தது எல்லாம் மகிழ்ச்சிதரும் ஏதுக்களாயிருக்க எதற்காக வருந்தவேண்டும்? உலகில் மக்களுடைய சுக துக்கங்களை எடை போட முடிந்து – போட்டுப் பார்த்தால், பலருக்குத் துக்கமே அதிகமாக இருக்கும். நம்மைப் பொறுத்தவரையில் சுகம்தான் அதிகம். ஆதலால் நாம் வருத்தப்படக் காரணமே இல்லையல்லவா?

**அமணன் :—** அதிகமாக அளக்கவேண்டாம் போதும்.

**இராசசி :—** எனக்கு மிகவும் கசப்பாக இருக்கிறது.

**கோவிந்த :—** அப்படி விடக்கூடாது. பித்த மிகுதியால் வாய்க்கசப்பாக இருந்தால் உணவால் சரிப்படுத்த வேண்டும். மனக்கசப்பாக இருந்தால் எம்போன்ற நண்பரிடம் பேசிப் போக்கவேண்டும்.

**இராசசி :—** (அமணனைப் பார்த்து) நமது கோவிந்தமாறன் தலையில் அறிவுக் கம்பிகளின் வட்டம் நிறைந்திருக்கிறதுபோலும். இக்கடிகாரக் கம்பிகள் சாவி கொடுக்காவிட்டாலும் தளராமல் அடித்துக்கொண்டேயிருக்கும். புதுமையான கடிகாரம் இது. இதனைச் சுமந்து திரியும் இருகால் பெட்டி இது. தளராமல் மணியடித்தலைத்தான் பேசுதல் என்று இவர் சொல்லிக்கொள்வார்.

**அமணன் :—** ஆமாம், பெரிய அளப்புத்தான்.

**கோவிந்த :—** ஐயா ஒரு...... (இராசசிம்மன் அமணனைப் பார்த்துக் கடிகாரம் மணியடிக்கத் தொடங்கிவிட்டது – நாம் எண்ணிக்கொள்ளலாம்.) ஐயா கேளுங்கள். ஒரு மணி

தன் தனக்கு வரும் துன்பத்தை எண்ணி வரவேற்க முற்பட்டால் அவனுக்கு (அமணன் இடைமறித்து)

**அமணன்** :— அவனுக்கு எல்லாம் காசாக மாறுமோ? காசியால் வந்ததென்று எண்ணிக் காசியாத்திரை சென்று தான் துன்பத்தையும், துக்கத்தையும் மாற்றிக்கொள்ள முடியுமோ அவனால்?

**இராசசி** :— அமணரே நீர் புத்திகொண்டு கூறும் கருத்தை நமது கடிகாரம் புத்தியைச் செலுத்தாமலே திரித்து அடித்துவிடும். அக்கடிகாரத்துக்குப் (கோவிந்தமாறன்) புத்தியிருந்தால் அதுபற்றி முடிவுகட்டிக்கொள்ளும்.

**கோவிந்த** :— பிரபுக்களே, நான் பேச...... (அமணன் போதும் நிறுத்தும்) சரி மணி திருப்பிடித்தே போகட்டும்.

**இராசசி** :— இத்தீவு நல்ல பசுமை நிறைந்திருக்கிறது.

**ஆதிநா** :— நல்ல காற்று. கெட்ட சுவாச உறுப்புக்கள் கூட இதனால் புதுமை பெற்றுப் பலமடையும்.

**கோவிந்த** :— இங்கு வாழ்வுக்குரிய அனைத்தும் உள... நிறுத்திக்கொண்டேன்.

**அமணன்** :— ஆனால், வாழ்வதற்குத்தான் வழியில்லை.

**இராசசி** :— புல்வளம் நிறைந்திருக்கிறது. புல் இவ்வளவு செழிப்பாக வளர்ந்திருப்பினும் மனித வளத்தைக் காணோமே.

**ஆதிநா** :— உலகத்தில் உள்ள அதிசயங்களில் இதுவும் ஒரு அதிசயந்தான்.

**கோவிந்த :—** நாம் யாவரும் உப்பு நீரில் — கடலில் விழுந்தோம். உடைகளில் ஈரமில்லை, பிசுபிசுப்பில்லை. அவற்றில் வழவழப்பும் மினுமினுப்பும் தோன்றுகின்றன. இது ஒரு அதிசயமல்லவா ?

**அமணன் :—** அவர் உடையைப் பற்றிப் பேசுகிறார். அவர் சட்டையைப் பேசச்சொன்னால் அது ஒரு கதையே சொல்லும்.

**கோவிந்த:—** நமது உடைகள் நமது அரசனின் பெண் திருமணத்துக்குச் சிங்கப்பூர் சென்றபோது எவ்வளவு அழகாக இருந்தனவோ அவ்வளவு அழகாக இப்போது இருக்கின்றன. திருமணத்தில் ஏற்பட்ட உடையழுக்கெல்லாம் திரும்பி வரும்போது கப்பல் புயலால் கவிழ, கடல் நீரில் பட்டு நனையாமலே அழுக்கு நீங்கி அழகு பெறுதல் என்பதை இப்போது எண்ணிப்பார்த்தால் அதுவும் ஒரு அதிசயமாகவே தோன்றுகிறது எனக்கு.

**இராசசி:—** கமலாவின் திருமணம் சிறந்த திருமணம். கமலாவும் சிறந்த அரசி. சகுந்தலையின் காலமுதல் இவளைப் போல் அழகி இருந்ததுமில்லை இருக்கப்போவதுமில்லை. ஆனால், சிங்கப்பூர் எவ்வளவு தூரம்! அடேயப்பா!

**அமணன்:—** சகுந்தலை, அவள் கைம்பெண் அல்லவா? இவளை ஒப்பிட ஏன் பாரதக் கதையை இழுக்க வேண்டும். அத்தினபுரத்திலே அப்ப அந்தச் சீதையைச் சொல்லலாமே.

**இராசே:—** சீதையைத் தூக்கிச்சென்ற இராவணன் இமயத்தையும் தூக்கித் தனது இசையாலேயே இறைவனை வசப்படுத்தித் தப்பினான். அந்த இசையெல்லாம் ஜாம்புவானிடம் மிக அற்பமாகும். நாரதரே தனது வீணையுடன் ஜாம்புவானிடம் கர்வத்துடன் வந்து போட்டியிட்டாராம். ஜாம்புவான் ஓர் பாடல் பாடினாராம். உடனே பூமியே இளகி நாரதரையும் வீணையையும் உள்ளுக்கு இழுத்துக்கொண்ட

தாம். உடனே பாடலை நிறுத்தி மேலே இழுத்துவிட்டாராம் ஜாம்புவான். இப்படி எத்தனையோ அதிசயங்கள்.

அமணன்:— ஜாம்புவான் அதிசயமான காரியங்களையெல்லாம் எளிதில் செய்து முடிப்பார். இசையினாலே வீடுகளைக் கட்டி மதில்களை உண்டாக்கிப் புது நகரங்களை ஏற்படுத்தி அரசர்களையும் அமைப்பாராம். பலர் இம்மாதிரி வந்த அரசர்கள்தான். தானே அரசனாக வருவது பலருக்கு முடியாதுதான்.

கோவிந்த:— எல்லோரும் என் வழிக்கு வந்துவிட்டீர்கள். அருவமான இசையை ஜாம்புவான் இப்படிச் செய்வார் என்றால் உருவமான இத்தீவை அவர் எடுத்துத் தன் பையில் போட்டுக்கொண்டுபோய்க் குழந்தைகளுக்கு விளையாடத் தருவார். குழந்தைகளுள் ஒன்று தோட்டத்தில் நட்டுவைக்கும். அது முளைத்தும் பல தீவுகளாக ஆகும் என்று நான் சொன்னால் என்னைக் கடிகாரம் மணியடிக்கும் என்று கூறுகிறீர்கள்.

ஆதிநா:— அந்தக் கலியாணப் பேச்சு எங்கெங்கோ போகின்றது. அது வேண்டாம். அது எனக்கு முழுதும் பிடிக்கவில்லை. அந்தப் பெண்ணைச் சிங்கப்பூரானுக்குத் தந்ததே பிசகு. அங்கு நாம் சென்றதும் தவறு. அங்கிருந்து நாம் திரும்பும்போதுதான் இத்தொல்லையெல்லாம் ஏற்படுகிறது.

இராசே:— எனது பிள்ளையும் போய்விட்டான். என் பெண் கமலாவும் போய்விட்டாள் என்றே சொல்லவேண்டும். சிங்கப்பூர் எங்கே இருக்கிறது? நாம் எங்கே இருக்கிறோம்? என் வாழ்நாளில் இனி அவளை எங்கே நான் பார்க்கப்போகிறேன்? நாகைத் தலைவன்—வஞ்சிக்கும் தலைவனாகவேண்டிய வீரராசேந்திரனை எந்த மீன் விழுங்கியதோ?

பராந்:— ஐயா, அவரை எந்த மீனும் விழுங்கியிருக்க முடியாது. அலைகளிலும் அழிந்திருக்க முடியாது. அலைகளின்மேல் மிதந்து கரை நோக்கிச் சென்றதை நான் கண்டேன். அவர் இறந்திருக்க முடியாது.

இராசே:— இல்லை. நான் நம்பவில்லை. என் காலமே நன்றாயில்லை. மகளையும் இழந்தேன். மகனையும் இழந்தேன்.

இராசசி:— அண்ணு, தங்கள் பெண்ணை உள் நாட்டில் ஒருவருக்கு மனைவியாக்காது, இவ்வாறு சிங்கப்பூரில் நாம் மணம் முடித்தது தவறுதான். கமலாவும் இம்மணத்துக்குச் சிறிதும் ஒப்பவில்லை. தங்களின் கட்டாயத்தின் மேல்தான் கமலா இசைய நேர்ந்தது. ஆனல் கமலாவை இவ்வாறு கண்ணுக்கெட்டாத இரங்கூன் சீமையில் தள்ளினதிலும், ஒரு நன்மை உண்டென்றால் அது இதுதான். தன் தந்தை, உடன் பிறந்தவன், எம்போன்றவர், யாவரையும் ஒருமிக்கக் கடலில் இழந்த தொல்லை கமலாவுக்கு எட்ட முடியாதல்லவா ?

இராசே :— உண்மைதான். ஆனல் செல்லாதிருந்தால், இத்திருமணம் அங்கு நிகழாதிருந்தால், இத்தொல்லை ஏற்பட்டேயிருக்காது. செல்வ மகள் பிரிந்தாள், நிலமகளும் திருமகளுமே என்னைப் பிரித்தும் வெறுத்தும் ஒதுக்கிவிட்டார்கள்போல் தோன்றுகிறது.

கோவிந்த :— தாங்கள் பேசியது உண்மையாக இருக்கலாம். ஆனல் இது போன்ற உண்மையைப் பேசாதிருப்பதே நல்லது. சமையமறியாமல் எதனையும் பேசுதல் கூடாது. உமது உண்மை முரட்டுத்தனமானது ; துன்பம் தரத்தக்கதாகவல்லவா இருக்கிறது ? வந்த துன்பத்துக்கு வாராத துன்பத்தை வருவித்துக்கொள்வதும், அறியாமையை எண்ணுவதும், துன்பம் நீக்கும் மருந்தாகாது. வெந்த புண்ணில் வேல் விடுவதேயாகும்.

**அமணன் :**— என்ன? மருத்துவ வேலைகூடத் தெரியுமா?

**கோவிந்த :**— இதில் ஒரு பொறுமையா? கோபமா? வேண்டாம். நாம் எல்லாருக்குமே காலம் நன்றாயில்லை.

**இராசே :**— இது ஒரு தீவு? இங்கு நாம் என்ன செய்வது?

**அமணன் :**— உழ வசதியிருந்தால் உழுது காஞ்சிரங்காய் விதைக்கலாம்—அப்பளத்துக்கு ஆகும் அல்லவா?

**இராசசி :**— வசதியற்ற நிலையில் நெறிஞ்சியும் கள்ளியும் போட்டால் விரைவில் தீவே நிறைந்துவிடும்.

**கோவிந்த :**— இங்கு மக்கள் ஏற்பட்டு, என்னை நீங்கள் இதற்கு அரசனாகவும் ஆக்கிவிட்டால் நான் என்ன செய்வேன் தெரியுமா? தற்போதுள்ள (காமன்வெல்த்) பொதுவுடைமைப் போக்கினை மாற்றி இங்குச் சிறந்த முறையினை அமைப்பேன். வணிகமுறையே இங்கு இருக்காது. வருத்து—போக்கு, ஏற்றுமதி—இறக்குமதி தடுக்கப்படும். குற்ற விசாரணை மன்றம், நீதி விசாரணை மன்றம் இரா. நிலவரி, தொழில்வரி, வீட்டுவரி காண முடியாது ஆண்டான்—அடிமை, ஏழை—பணக்காரன், உழைப்போன்—வாளாவிருப்போன் இத்தன்மைகள் தோன்றவே முடியாது. தன்னது—பிறரது, எல்லை—கொல்லை, உழுநிலம்—தரிசு நிலம், இவைபோன்ற வேறுபாடும் இலவாகும். உலோக வகைகள் மது இனங்கள் இங்குத் தலைக்காட்ட முடியா. ஒழுக்கக்கேடு சிறிதும் இன்மையின் கற்பென்ற பேச்சே எழாது. எல்லாம் இயற்கை. இயற்கையில் தவறு ஏற்படாதது இயற்கையாதலால் இயற்கையோடு இயைந்த வாழ்வில் எல்லாம் ஒன்றுதான். இன்பமேது? துன்பமேது? அரச இனத்தினர் என்ற எண்ணம் கூடத் தங்களுக்கு அகன்றிருக்கும்,

இராசசி :— மிகவும் விந்தை. இந்த அரசாங்கத்தின் கீழ் எங்களுக்கு அரச எண்ணமே அகலவேண்டும். இவர் அரசனாய் ஆளவேண்டும். ஆனால் அரச அமைப்பில் யாவும் இயற்கையென்று நிலைநாட்ட வேண்டும். இதில் அமைதி தோன்றுகிறதா? இல்லை. இல்லை. அறிவுடைமை போன்று பேசும் அறிவற்ற பிதற்றலே தோன்றுகிறது.

அமணன் :— நான் முன்னரே குழப்பம் அடைந்திருக்கிறேன். ஆதலால் இதில் உள்ள தவற்றினை அறிய எனக்குத் தெளிவும் இல்லை; அந்த முயற்சியில் நான் புதிதாகக் குழப்பம் அடையப்போவதும் இல்லை.

கோவிந்து :— வழிவழி வந்த அரசர்களே இலையாகும் போது நான் எவ்வளவினன்? அமைப்பை ஏற்படுத்தும் அளவுக்கு நான் அரசன், அல்லது தலைவன், அல்லது முதல்வன் என்றோ, அல்லது வேறு எந்தப் பெயரை வேண்டுமானாலும் பெறலாம். ஆனால் இந்த முறையை இயற்கையாகப் பரப்பிவிட்டால் பின்னர் யாவும் இயற்கையாய் என்றும் இயற்கையுடன் இயங்கும்.

இராசே:— இதற்கும் இயற்கையென்ற பெயர்போதும். அல்லது இது ஒரு இயற்கையோ என்னவோ? புதிய சிலர் மக்களைப்போலத்தான் இருக்கிறார்கள்—பெற்றிருக்கிற உள்ளத்தை யார் அறிவர்? அவர்கள் என்னதான் எண்ணுவார்களோ? ஆனால் அவர்கள் பேசுவது ஒன்று, அது எழுதப்படும்போது மற்றொன்றாக அமைகிறது. அது அரசியலாக்கமாகும் (constitution) போதும் நடைமுறையில் வரும்போதும் வெவ்வேறு வகை இயற்கையை இயக்குகின்றது. ஆனால் எந்த இயற்கையும், பிற்பகுதி, முற்பகுதியை மறந்துவிடுகிறது. இந்த உண்மையை நான் ஒரு கற்பனை நாடகத்திலே படித்தேன். இது நமது அரசியலமைப்பில் — இத்தீவில் ஏற்படாமல் செவ்வையாக நடைபெற வேண்டும் என்பது எனது அவா,

கோவிந்த:— என்ன நம் நால்வரைத் தவிர யாவரும் தூங்கிவிட்டார்களே. ஆம் கவலையற்றவர்களுக்குத் தூக்கத்துக்கு என்ன குறைவு? ஆனால் அவர்கள் தூங்குவதும் விழித்திருப்பதும் ஒன்றுதான். எனக்கோ அரசியலமைப்பு முறையில் ஏற்பட்ட கவலையும் களைப்பும் தூக்கத்தை உண்டாக்குகிறது.

இராசே:— அது ஒரு தொற்றுநோய். எனக்கும் தூக்கம் வருகிறது.

(அமணன்-இராசசிம்மன் இருவரைத்தவிர யாவரும் தூங்கல்)

அமணன்:— நண்பரே, உம் முகத்தை மேற்போக்காய்க் காணும்போது எவருக்கும் ஒரு சிறப்புத் தோன்றாமல் இருக்க முடியாது. ஆனால் நான் கூர்ந்து நோக்கும்போது முகத்தில் அரசவட்டம் தோன்றுகிறது. தலையில் அரச முடியும் மேலே குடையும், கையில் செங்கோலுமாக உமது உருவ முழுதும் இராச சின்னங்கள் தோன்றுகின்றன.

இராசசி:—தாங்களும் தூங்கிக்கொண்டு கனவில் புலம்புகின்றீரா? விழிப்பில் நினைவோடுதான் பேசுகிறீர்களா? நான் எப்படி உணர்வது?

அமணன்:— நண்பரே, நான்தான் தங்களைப்பற்றி ஐயுறுகிறேன். சொற்கள் நன்கு கேட்கவில்லையா? எனது சொற்களுக்குப் பொருள் விளங்கவில்லையா? விழிப்புத்தானா?

இராசசி:— எனக்கு விளங்கிவிட்டது. நீவிர் தூக்கத்தில் உளறுகிறீர். நான் விழித்துத்தான் இருக்கிறேன். என்றாலும் எனது நிலைமை எனக்கு ஒரு அதிசயத் தூக்கமாய்த் தோன்றுகிறது. பேசுகிறேன்; கேட்கிறேன்; எனினும் நடக்கவோ சுறுசுறுப்பாகக் காரியங்கள் செய்யவோ முடியாத நிலைமை தோன்றுகிறது.

அமணன்:— இப்போது எனக்கு விளங்கிவிட்டது. நான் நன்ருக விழித்துக்கொண்டேன். நான் தங்களே விழிப்பிக்க வேண்டும், தங்களுக்கு இவ்வித ஒரு அதிசய நிலை ஏற்பட்டிருக்கிறது நன்மைக்கேதான். ஆனுல், இதனை இப்படியே வளரவிட்டால் உள்ள நிலையும் கெட்டு, வரவேண்டிய அரசப் பதவியும் கிட்டாமல் மரணத்தில் முடிந்துவிடும். ஆதலின் உடனே செய்தல் வேண்டும். நான் சொல்வதைக் கேள். அதன்படி நட. உடனே பலன் கிட்டும்.

இராசசி:—நான் ஒரு குளத்தில் தேங்கிக் கிடக்கும் நீர்; என்னுல் என்ன ஆகக்கூடும்? எனக்கு நம்பிக்கையில்லை.

அமணன்:— உம்மை ஆற்று நீராகப் பெருக்கெடுத்து ஓடச் செய்யமுடியும். ஒருவருக்கு அச்சமும், சோர்வும் தனது சக்தியையே மறைத்துக்கொண்டிருக்கின்றன. சிலருக்குச் சூழ்நிலையால் தம் சக்தியும் பெருமையும் அமுக்கப்படுவதும் உண்டு. வேறு சில சூழ்நிலையால் தூண்டப்பட்டு உயர்ந்த நிலையை அடைதலும் உண்டு.

இராசசி:— அருள்கூர்ந்து தாங்கள் சொல்லவேண்டியவற்றை விளங்கச் சொல்லுமாறு வேண்டுகிறேன். நும் நிலைமை பிரசவ வேதனையைக் காட்டுகிறது. குறிப்பால் என்னுல் உணரமுடியவில்லையே?

அமணன்:— நான் தேவன் அல்லன். இறப்பது உறுதி. சவ அடக்கம் செய்தபின் என்னை யார் நினைக்கப் போகின்றனர்? ஆனுல் இப்போது கிடைத்துள்ள வாய்ப்பினைப் பயன்படுத்தி ஒரு நற்செயல் செய்விக்க எண்ணுகிறேன். இங்குத் தூங்கிக்கொண்டிருக்கும் இராசேந்திரனின் மகன் வீராசேந்திரனைக் கடல் விழுங்கிவிட்டது. இவரும் நல்ல தூக்கத்தில் இருக்கிருர். இவரைக் கடலில் தூக்கிப் போட்டால் தூக்கத்திலிருப்பவர் விழிக்கப்போவதுமில்லை, நீந்திக் கரைசேரப்போவதுமில்லை. மகனோடு அமைந்துவிடுவார், நாகைக்குத் தாங்களே அரசராகலாமன்ருே?

இராசசி :— மகள் கமலாவுக்குத்தானே உரியதாகும்.

அமணன் :— இரங்கூனுக்கு நாகை நிலைமை எட்டப் போவதில்லை. கூனல் சந்திரனால் போய்ச் சொல்ல முடியாது. சூரியன் போய்ச் சொல்லமாட்டான். இச்செய்தியெல்லாம் அவளுக்கு எட்ட வகையே இல்லை. எட்டினாலும் அவர்கள் செல்வாக்கு இங்கு ஒன்றும் நடவாது. ஆதலால் கமலா இருந்ததாகவோ மற்றவர் உதவ இருப்பதாகவோ கருதவேண்டியதே இல்லை.

இராசசி:— கற்கண்டாகச் சிலர் மனச்சாட்சியைக் கடித்துத் தின்கின்றனர். சிலர் அதனை ஒரு ஆறுப் புண்ணாகக் கொண்டு அஞ்சி நடுங்குகின்றனர். நான் அதனை ஒரு தெய்வமாக எண்ணுகிறேன். அதுபற்றித்தான் சிறிது......

அமணன் :— மிகவும் நல்லதுதான். அத்தெய்வத்தைத் துணைக்கு அழைத்துக்கொள்ளலாம். இதோ அவருக்கும் இந்த நிலத்துக்கும் என்ன மாறுபாடு. அவரும் தூங்குகிறார். நிலமும் விழித்திருப்பதாகத் தெரியவில்லை. இதோ இக்கத்தியைப் பிடி. மூன்று அங்குலம் இதன் முனையை அவர் மார்புள் செலுத்திக் கடலுக்குச் சிற்றுணவாக்கு. பிறகு எஞ்சியுள்ள யாவரும் நம்மவராய்விடுவர். நாம் இட்ட பணி செய்வர். நமது கடிகாரமாகி நமக்கு ஒத்தே மணிகாட்டும் மக்களாவர்.

இராசசி :— அருமை நண்பரே, உம்மை முழுதும் பின்பற்றுவேன். தாங்கள் வஞ்சியைப் பெற்றீர். நான் நாகையைப் பெறுவேன். எனக்காகக் கத்தியை எடும். உமக்காக நான் இனி வஞ்சியின் கப்பத்தை எடுத்துவிடுவேன். இருவரும் கையில் கத்தியை எடுத்தால் நம் அன்பு ஒளி விட்டு இணங்கிவிடும்.

அமணன் :— இருவரும் கத்தியை எடுப்போம். வீசுவோம். ஒன்று கோவிந்தன்மேலும் படட்டுமே. நமது

ஒற்றுமையான செயலில் அவர்களும் ஒருவருக்கொருவர் துணையாகப் போகட்டுமே. இன்பத்துக்கு—ஆக்கத்துக்கு (காத்தவராயன், கோவிந்தமாருர் காதுடன் உனக்கு விபத்து; விழித்துக்கொள். ஒருவரும் இறக்கக்கூடா தென்பது எனது தலைவர் கட்டளை. விழி. சூழ்ச்சி செய் வோர் வீழ்ச்சியடைவர்) ஒற்றுமையென்ருல், துன்பத்துக் கும் அழிவுக்கும்.....துடுமென்று ஒத்துக் காரியம் செய்ய வேண்டும். (இருவரும் கத்தியை உருவுதல்)

கோவிந்த :— ஆ, என்ன காரியம்! என்ன நாடகம்? கனவா? என் கண்கள் இப்போது என்ன செய்கின்றன?

இராசே :— நான் விழித்துக்கொண்டேன். ஏன்? எதற்காக நீங்கள் இருவரும் கத்தியை இவ்வாறு ஓங்கிக் கொண்டிருக்கிறீர்கள்? உங்கள் முகத்தில் இரு தூம கேதுக்களின் தோற்றமல்லவா காண்கின்றேன். இத்துன் னிமித்தம் யாருக்கு?

இராசசி:— தங்களின் நிமித்தம் தங்கள் மெய்காப்பாள ராய் உருவின கத்தியுடன் நிற்கின்ரோம். சற்றுமுன் உண் டான ஒரு ஒலி முதலில் எங்களுக்கு அச்சத்தையும் உடனே தங்களைக் காக்கும் பணியையும் எங்களுக்குத் தந் தது. அந்த ஒலிதான் உங்களையும் எழுப்பியது.

இராசே :— என் காதில் அப்படி ஒன்றும் கேட்க வில்லையே? கோவிந்தமாருர் ஏதோ உளறினமைதான் என் காதில் விழுந்தது. என்னை விழிக்கச் செய்தது.

இராசசி :— ஆ, அவ்வொலி ஒரு அரக்கனையும் அச் சுறுத்தியிருக்குமே. பூகம்ப வொலியைவிடப் பெரியதாக இருந்ததே? இத்தீவுக்கு இதுவும் ஒரு இயற்கையோ என் னவோ? கொடிய ஒலி.

**கோவிந்த** :— நான் ஒரு ஒலியை என் காதில் கேட்டேன். அது அச்சம் தரவில்லை, அறிவுரை தந்தது. எனது விழிப்புடன் தங்களையும் விழிக்கச்செய்ய நானே கத்தினேன். கண்டேன். இருவரும்தான் காண்கின்றோமே? இவர்கள் உருவின கத்தியுடன் நின்று நம்மைக் காப்பதினும் நம் கத்தியை உருவிக்கொண்டு நாமே நம்மைக் காத்துக் கொள்வோம். (இருவரும் தத்தம் கத்தியை உருவிக் கொண்டு அவ்விடம் விட்டு அகல்கின்றனர்.)

## அங்கம் 2. களம் 2.

(தீவின் மற்றொருபுறம்—கலியன் விறகுக் கட்டுடன் வருதல்)

**கலியன்** :— இடுகாடு, சாக்கடை, சதுப்பு நிலம் இங்கு மலியும் நோய் அணுக்களைப் பகலவன் ஒளியும் சூடும் ஒழிக்கக்கூடாது. அதற்கு மாறாக எல்லா நோய்க் கிருமிகளும் எனது தலைவன் உடம்பில் போய்க் குவிக்கப்படல் வேண்டும். அவை அவனது உடலின் கணுக்களிலும் இரத்தக் குழாய்களிலும் தங்கிக்கொண்டு துன்புறுத்தல் வேண்டும். எனது சாபத்தினை—பேச்சினை—நினைப்பினை யெல்லாம் அவனுடைய காத்துக்கணங்கள் தெரிந்துகொண்டு அவனிடம் சொன்னால் என்ன செய்வது? சொன்னால்தான் சொல்லட்டுமே. என் வயிற்றெரிச்சல் அவனை விடாது. எனது சாபம் பலிக்கும். என் பக்கம் நியாயம் இருக்கும்போது இவன் பேச்சைக் கேட்டுக் காத்துக்கணங்கள் எனக்குத் துன்பம் செய்யா. அவனது ஏவலால் இதுவரை அவனது கணங்கள் குரங்குகள்போல் வந்து பல்லைக் காட்டிப் பயமுறுத்தியதும், பாம்புபோல் வந்து கௌவியதும், ஆந்தைபோல் வந்து அலறியதும் நினைக்கும்போதே நடுக்கம் உண்டாகின்றது. அவன் இன்னும் என்னை என்னென்ன செய்ய எண்ணியிருக்கிறானோ?—இதோ! இதோ!! அவனது ஏவலால் வரும் ஆளேதான். நான் விறகு கொண்டு

வர நாழியாகிவிட்டதென்று கசையடி கொடுக்க வருகிறான் போல் இருக்கிறது. சரி—மண்ணோடு மண்ணாய்ப் பூமியில் விழுந்துகிடந்தால் இவன் நம்மைக் கவனிக்கமாட்டான். (கட்டையைப் போட்டுவிட்டுப் பூமியில் விழுந்து கிடக்கிறான் கலியன் ; திருக்கு வருகிறான்)

திருக்கு :— காத்து அடிக்குது ; சத்தம் அதிகம் ஆகிறது ; புயல் சுமர்கிறது. ஒண்ட இடமில்லை. மழையே தலைக்குமேல் போய்விடு. எங்கே போகப்போறே. நன்றாய் வயிறு வெடிக்கக் குடிச்சுட்டு வருகிற நீ சும்மாவா போவே. இடிகூட உண்டாகும்போலத் தோணுதே— அந்த இடி என் தலையில் விழுந்தால்—தலையில்தான் விழும். (கலியன்மேல் தன் கால் தடுமாறிக் கீழே விழுந்து எழுகிறான்) இதென்ன ? மனிதனா ? மீனா ? இரண்டும் கலந்த மாதிரியல்லவா இருக்கிறது ! செத்து ஒரு வாரம் கழிந்திருக்கும்போல் தோன்றுகிறதே. என்ன நாற்றம் ? இதை யார் கவனிப்பார் ? இதன்மேல் ஒரு வாசம் போட்டு மறைத்துவிடலாம். இந்த மாதிரி ஒரு அதிசயப் பிறவியுடன் நான் என் ஊரில் சிலநாள் தங்கினால் பெரிய பணக்காரனாய்விடுவேன். காலணா பிச்சை போடாதவன்கூட இதைப் பார்க்க ஒரு ரூபாய் டிக்கெட் வாங்கிவிடுவான். எவ்வளவு பணம் சம்பாதிக்கலாம். இது என்னை ஒரு பணக்காரனாய்ச் —செல்வாக்குள்ளவனாகக்—கை தூக்கி விட்டுவிடுமே. ஏ அதிசயப் பிராணியே, உனக்கு இங்கு மதிப்பில்லையே. உனக்குக் கால், கை எல்லாம் இருக்கே. மீன் மாதிரியும் இருக்கிறாயே. இந்தத் தீவு ஆறுமீன் இப்படித்தான் இருக்குமோ ? இடி, இடிச் சத்தம் தொடர்ந்துவிட்டது. ஒரு புயல் வருகிறது. நான் இந்தப் பிராணிக்கும் கீழே ஒளிந்துகொள்வேன். இப்பிராணிதான் எனக்குப் போர்வை. மண்தான் எனது படுக்கை. எனது துன்பத்தை நீக்கிக்கொள்வதற்கு இப்படுக்கையும் போர்வையும் போதும். படுக்கையும் போர்வையுமே பலருக்குத் துன்பத்தை உண்டாக்கியும் இருக்கின்றன. படுக்கையின்

இரகசியத்தை அறிந்தவர் யார்? நமக்கு இது அருமை யாகத்தான் கிடைத்திருக்கிறது. புயல் விடும் வரை இங்கு அறிதுயில் கொள்வோம்.

(கள் புட்டியுடன் கணேசன் வருதல்)

**கணேசன் :—** இனிமேல் கடலுக்குப் போகமாட்டேன். அவ்வளவு தண்ணியில் போய் யார் சாவது? கரையிலேயே சாவதுதான் நல்லது. இதென்ன? இங்கே தெரிவது பேயா, பிசாசா? இல்லே இத்தீவு ஆருத்தானு? இதெற்கெல்லாம் நான் பயப்படமாட்டேன். என்னிடத்தில் மருந்து தாயாராக இருக்கிறது. உனக்கு நாலுகால் இருப்பதற்காக நான் பயப்படமாட்டேன். தண்ணீரிலேயே சாகாமல் வந்தவன் உனக்குப் பயப்பட்டா சாவான்? நாலு கால் பிராணி எப்போதும் இருகால் பிராணிக்கு வாகன மாகும். நான் மூக்கால் மூச்சு விடும்வரை சாகமாட்டேன். மூச்சு இல்லாதபோது என்னை ஒருவரும் பயந்தவன் என்று கூறவும் மாட்டார்கள்.

**கலியன்:—**ஐயோ, கீழேயிருந்து அந்தக் காத்தவன் என்னை என்னென்னவோ படுத்திவைக்கின்றுனே?

**கணேசன்:—**இதில் ஏதோ இரகசியம் இருக்கிறது! இப் பிராணி இத்தீவின் கருப்பொருள்போல் இருக்கிறது. நான்கு கால்கள். பாதி மனிதன்; பாதி மீன். ஆனுல் நமது மொழியைப் பேசுகிறதே? இந்த மருந்தை ஊற்றிக் குளிரைப் போக்கிவிட்டால் நம்மோடு பேசும். நமது ஆளாக வைத்துக்கொண்டு நாகைக்கும் கொண்டுபோகலாம். இதைக் கொஞ்சம் குடி. (கலியன் வாயில் ஊற்றுகிருன் கள்ளை)

**கலியன்:—** என்னைத் துன்புறுத்தாதே. இனிமேல் நான் விறகைக் காலாகாலத்தில் கொண்டுவந்து ஒழுங்காக வேலைசெய்வேன். நான் சொன்னதெல்லாம் தப்பு. மன்னித்துவிடு.

கணேசன்:—சீ, வா, ஏ பூனே, இந்தா, இதைக்குடி, மொழி ஞானம் உண்டாகும். வாயைத் திற. நான் உன் எதிரி அல்ல; நண்பன். உன்னைக் கொண்டுபோய் அதிக மான விலைக்கு விற்றுப் பணக்காரனாகப்போகிறேன். உன்னை நம்பியுள்ளவன் நான். சீக்கிரம் வாயைத் திற.

திருக்கு:—அது நமக்குத் தெரிந்த குரல்—நண்பன் குரல்—அது எப்படி யிருக்க முடியும்? அவன்தான் கடலில் மூழ்கிப்போய்விட்டானே. ஆமா. அவனது ஆவி: பிசாசுதான். கடவுளே, என்னைக் காப்பாற்று!

கணேசன்:—இதென்னடா, இது நல்ல தீவுடா! இரண்டு குரல் தோன்றுகிறது. நாலு கால். இரண்டு குரல். கீழ்ப் பக்கத்துக் குரல் என்னை நண்பன் என்று கூறுகிறது. மேற் பக்கத்துக் குரல் வேறென்னவோ கூறுகிறது. ஒவ்வொன் றையும் உற்றுப் பார்த்தால் அங்கங்கே என்னென்னவோ புதுமைகள் எல்லாம் காணும்போலத்தான் தோன்றுகிறது. இந்தா, இன்னும் கொஞ்சம் குடி, தாராளமாகப் பேசு.

திருக்கு:—க, க, கணேசா, நீ தானுடா?

கணேசன்:—குடிக்காத வாயிலிருந்துடா நல்ல பேச்சு வருது. இது விசித்திரப் பிராணியல்ல; பேய்தான்!

திருக்கு:— இல்லை நான் பேயல்ல. திருக்கு நான்தான்.

கணேசன்:—திருக்குன்னு வாடா வெளியில். இந்த நான்கு கால்களில் எந்தக் காலுடா உன்னது? இந்தக் குட் டைக் கால்கள் தானே! (வெளியே இழுக்கிறான்) அடே திருக்குத்தாண்டா நீ? இந்த மச்சாவதாரத்துடன் எப் படிடா கலந்தாய்? வாயால் விழுங்கிப் பின்னால் கழித்தானா? என்னடா? சொல் சீக்கிரம்?

திருக்கு:—நான் இடியில் விழுந்து செத்துப் புயலால் மூடப்பட்டதாகவே நினைத்திருக்கிறேன். நீயும் தண்ணீரில்

விழுந்து எனக்கு முன்னமேயே செத்துப்போனாய். நீ சாக வில்லையா? அப்படியானால் புயல் நின்றுவிட்டதா? நாம் இரு வரும் ஆவி உலகில் பேசிக்கொண்டிருக்கிறோமா? நாகை வாசிகளாகத்தான் பேசிக்கொண்டிருக்கிறோமா?

**கலியன்:**—அடே, இவன் எவ்வளவு அழகு. அழகா இருக்கிற இவன் யார்? தூதனாக இல்லை.—கொடுமை செய் யும் காத்தவன் கும்பலும் அல்ல. இவன் ஒரு மனிதன்தான். ஐயா, வணங்குகிறேன்.

**கணேசன்:**— ஏ கருவாடு, (கலியனை) உனக்கு உடம்பு எப்படிடா இருக்கு? நடுக்கமில்லையே?

**கலியன்:**—இல்லிங்க—நீங்க எங்கேயிருந்து இப்படி வந் தீங்க? ஆகாயத்திலிருந்து குதித்தீர்களா?

**கணேசன் :**— நான் சந்திர மண்டலத்திலிருந்து வந்த வன். அந்தக் காலத்தில் சந்திர மண்டலத்தில் நான்தான் மனிதனாக இருந்தவன். அது அந்தக் காலம்.

**கலியன் :**— நான் அப்பவே உன்னைப் பார்த்திருக் கிறேன். ஆனால் வணங்கினது இல்லை. அப்போது என் தலைவி, வட்டமான நிலவைக் காட்டி, உன்னைப் பார்க்கச் சொன்னாள். அப்போது பக்கத்தில் உன் நாய்—ஒரு புதர் இரண்டும் இருப்பதையும்கூடக் காட்டினாள். அவையெல் லாம் எனக்கு இப்போது ஞாபகம் வருகிறது.

**திருக்கு :**— ஏ கணேசா, இது சரியான முட்டாள் பிராணிடா! நீயோ சந்திரனில் இருக்கும் பயித்தியக்காரன் என்று அவனாலேயே மெய்ப்பிக்கப்பட்டாய். முட்டாள் பிராணி எதையும் நம்பும்! சாட்சியும் கூறும். ஏ பிராணி, உன் பெயர் என்ன?

**கலியன் :**— என் பெயர்தான் கலியன். (கணேசன் காலில் விழுந்து) இத்தீவு முழுதும் உனக்குக் காட்டுவேன்.

குடிக்க நல்ல நீர்ச்சுனையைக் காட்டுவேன். நல்ல பழங்கள், மீன்கள் எல்லாம் தருவேன். உனக்கு விறகு கொண்டு வருவேன். அந்தக் கொடுங்கோலனுக்கு ஒன்றும் தரமாட்டேன். எல்லாம் உனக்குத்தான். நான் தொண்டன். நீதான் இனிமேல் எனது தலைவன். எனது அரசன்.

**கணேசன் :—** சரி, நீ முன்னாலே போடா கலியா. ஏ திருக்கு, நீ இந்தப் புட்டியைத் தூக்கிக்கொண்டு நடுவே போடா. அரசனும் செத்தான். நான்தான் இந்தத் தீவுக்கும் எல்லா இடத்துக்கும் தலைவன். உனக்கு நல்ல மந்திரி வேலை தருகிறேன் போடா திருக்கு.

**திருக்கு :—** முட்டாள் கலியன் உன்னைத் தலைவனாக ஆக்கிவிட்டான். எனக்கு நீ மந்திரி வேலை தர முடிவு செய்துவிட்டாய். இந்த முட்டாள் நாளைக்கு என்னையும் தலைவனாக்குவான். வேறொருவனுக்கும் அடிமையாகுவான். நான் இதெல்லாம் கொஞ்சமும் நம்பவில்லை. ஏ கலியா, போடா ; வழி காட்டுடா ; பசிடா.

**கலியன் :—** நான் இதோ போறேன். உங்களுக்கு வேண்டியதெல்லாம் கொண்டுவந்து தருகிறேன். ஆனால் அவனுக்கு—அந்தக் கொடுங்கோலனுக்கு ஒன்றும் தரமாட்டேன். அவன் பாத்திரங்களை விளக்கமாட்டேன். ஊற்று இறைக்க மாட்டேன். விறகு வெட்ட மாட்டேன். வீடு கூட்ட மாட்டேன். எனக்கு—இந்தக் கலியனுக்கு வேறு தலைவன் கிடைத்தான்—அவனும் (சயசிலனும்) வேறு ஆள் பார்த்துக்கொள்வான்.

## அங்கம் 3. களம் 1.

(சயசீலன் வீட்டுக்கெதிர்—வீரராசேந்திரன் விறகுக் கட்டையைச் சுமந்து வருகிறான்.)

வீரராசே :— பெரிய கட்டைகள்தான். கடினமான வேலைதான். ஆனால் செய்து முடிப்பதில் மிகுந்த மகிழ்ச்சி தான் தோன்றுகிறது. இலேசான தொழிலில் ஏற்படும் மகிழ்ச்சியினும் கடினமான தொழிலை முடிப்பதில் காணும் மகிழ்ச்சி பெரிதாகத்தான் இருக்கிறது. அரசன் மகனுக்கு அரசாளுவதுதான் குடித்தொழில். கட்டை தூக்குவது புன்தொழில் என்று நான் நினைக்கவில்லை. அரசாளுவது பொறுப்பு மிக்க தொழிலாக இருக்கலாம். கட்டை தூக்குவதில் அவ்வளவு பொறுப்பு இல்லாமல் இருக்கலாம். உள்ளத்தின் வேலை ஒன்று; உடலின் வேலை ஒன்று. ஆனால் அதில் உள்ள கவலையும், விழிப்பும் இதற்கு வேண்டுவதில்லை. இதில் விபத்துக் குறைவு. அதில் விபத்து மிகுதி. தொழில் நிலையில் தொழில்களை ஒன்றுகக் கூறினும் பயன் நிலையில் பலவகைப்படும். ஒரு தொழிலே சில சமையம் இரண்டிற்கும் வேலை அளிப்பதாகவும் அமையும். இத்தொழில் உடல் தொழிலாகக் கருதியே அப்பெண்ணின் தந்தையார் எனக்குத் தந்திருக்கிறார். அவருக்கு இது புன்தொழிலாக இருக்கலாம். எனக்கு இது புனிதத்தொழில். உள்ளத் தொழில். நான் அப்பெண்ணுக்காகச் செய்வது இது. அப்பெண்ணை மனத்துட்கொண்டு அப்பெண்ணின் தந்தையார் காட்டும்–கூறும் தொழில்களையெல்லாம் புனிதமாகவே எண்ணி முடிக்க முனைந்தேன். அப்போது அத்தொழிலின் பலன் என்னளவில் மிக உயர்கிறது. எனது தந்தையார் என்னிடம் ஒப்பித்த ஒரு செங்கோல் ஆட்சித் தொழிலினும் இத்தொழில் ஒரு புதுப்பலன் தருவதாகவே தோன்றுகிறது. (கட்டையை மாற்றி மறு பக்கம் தோளில் வைத்துக்கொண்டு) இதுபோல் இன்னும் ஒரு ஆயிரம்

கட்டைகள் தூக்கிவந்து அடுக்கவேண்டும். இவ்வேலையைக் கண்டு அப்பெண் கண்ணீர் விடுகிறாள். நான் செய்வது என் நிலைமைக்குப் பொருந்தாத இழிதொழிலாக எண்ணி வெம்புகிறாள். இத்தொழில் எனக்குக் கடினமுமல்ல; இழிவானதுமல்ல. விரைவில் செய்து முடிப்பேன். (சயசீலன் பின்னும்—மாலினி முன்னுமாக வருதல்)

மாலினி:—எவ்வளவு கடுமையான வேலை! அந்தக் கட்டைகள் மேல் இடிவிழுந்து எரியத் தொடங்கினால் அவைகள் கூட உமக்காகக் கசிவு காட்டிக்கொண்டே எரியுமே. வேண்டாம் சற்று இளைப்பாருங்கள். என் தகப்பனார் இப்போது படிப்பில் முனைந்திருக்கிறார். படிப்பில் உட்கார்ந்தால் மூன்று மணி நேரம் அசையமாட்டார். அதுகாறும் இளைப்பாறலாமல்லவா?

வீரராசே:—பெண்ணே, என் கடமையைத் தொடர்ந்து செய்துகொண்டிருந்தாலே கட்டைகள் முடியுமுன் பொழுது முடிந்துவிடும். இதில் இடையில் வேலையை நிறுத்துவது தகாத காரியம். வினையே ஆடவர்க்குயிர். அதனை நிறுத்துவது எப்படி?

மாலினி:—நான் வேலையை நிறுத்தச் சொல்லவில்லை. வேலை நடக்கும். தாங்கள்தான் ஓய்வுகொள்ள வேண்டும். ஓய்வாக இருந்துவரும் நான் அவ்வேலையை நிறுத்தாமல் செய்வேன்.

வீரராசே:—இது நீ செய்யும் வேலையும் அல்ல. இது உனக்குத் தந்த வேலையும் அல்ல. எனக்குத் தந்த வேலையை நான் வாளாவிருக்க நீ செய்வது தகுதியும் அல்ல.

மாலினி:—நான் பிறப்பால் பெண்ணாகப் பிறந்தேன். ஆனால் தொழில் ஆணாகவோ, பெண்ணாகவோ பிறக்கவில்லை. தொழிலுக்குப் பால் இல்லை. சமதருமம் பழகிய நாக்குச் சனாதனத்தையும் மறக்கவில்லைபோலும்! இத்தொழில் நான்

செய்யலாம். எனக்குச் செய்து பழக்கமும் உண்டு. அன்றியும் தாங்கள் பிறாது கட்டளையைக் கடமையாகக்கொண்டு செய்கிறீர்கள். நானோ, எனது விருப்பத்துக்கு விளையாட்டாகச்செய்ய எண்ணுகிறேன். உரிமையுடன் செய்வதாயினும் எனக்கு மிகவும் மகிழ்வளிப்பதேயாகும். தாங்கள் தடுக்க வேண்டாம். நானே செய்கிறேன்; அல்லது நானும் செய்கிறேன்.

**சயசீலன்:**—மாலினி, உனக்கென்ன பித்தம் தலைக்கேறி விட்டதா? அவன் கட்டையைத் தூக்கி அடுக்கினால் உனக்கென்ன? அவன் தொழிலில் நீ இனித் தலையிடாதே. நான் விரைவில் திரும்பி வருவேன். கவனமாக நடந்து கொள்.

**வீரராசே:**—பெண்ணே எனக்குக் களைப்பென்பதே தோன்றாது. நீ அருகில் இருக்கும்போது வேலை விரைவில் முடிந்துவிடும். உன் பார்வைச் சக்தியே என்னைப் பல வீராசேந்திரனாக்கி வேலையை முடித்து வைக்கின்றது. அழகுத் தெய்வமே, உனக்கு நின் தந்தையார் இட்ட பெயர் என்ன? என் பெயருடன் அதனையும் இணைத்து வழிபாடு செய்ய என் உள்ளம் விரும்புகிறது.

**மாலினி:**—என் பெயர் மாலினி. (தந்தை வருவதைப் பார்த்து) அப்பா! என்னைப் பொருத்தருள வேண்டுகின்றேன். என் பெயர் மாலினி என்று கூறிவிட்டேன். அது ஒருவேளை தங்கள் கட்டளையை நான் மீறியதாக இருக்குமோ என்று அஞ்சுகிறேன்.

**சயசீலன்:**—அச்சம் வேண்டாம்; அவசரமும் வேண்டாம். விரைவில் மீள்வேன். இங்கேயே இரு மாலினி.

**மாலினி:**—தந்தையார் என்னவோ வேலையாக முனைந்து திரிகிறார். நல்ல வேளையாக அவரும் என் பெயரினைக் குறிப்பிட்டார். சரி, என் பெயர் எதற்கு?

**வீரராசே** :— முன்னமே சொன்னேனே வழிபட என்று. அன்றியும் அழகுத் தெய்வத்துக்கு ஒரு பெயர் எப்படி அமைந்திருக்குமென்று அறிய எண்ணித்தான் கேட்டேன். சில உறுப்புக்களின் அழகினையும் சில குணங் களின் சிறப்பினையும் கொண்டே பல பெண்கள் உயர்வரிசை யில் நிறுத்திவைக்கப்படுகிறார்கள். பல உயர்ந்த பெண்கள் சில குணக்குறையாலும் சில உறுப்புக்களின் அழகு நிறை வின்மையாலும் குறையாகப் பேசப்படுதலையும் நான் நாளும் நாளும் கேள்விப்பட்டிருக்கின்றேன். ஒரு பெண் ணின் பலவகை நிறைவும் ஒரு சிறு குறையால் குறைய நேரிடுகிறது. குற்றத்தை விரித்துக் குணத்தையழித்துப் பேசுவதைத்தான் நான் பெண்ணுலகில் கண்டிருக்கிறேன். ஆனால் உன்னளவில் பெண்ணுலகமே உன்னைப்பற்றி ஒரு குறையும் பேச முடியாத ஒரு குறையைத்தான் அடையும். எல்லாவற்றிலும் முழுத்தன்மை பெற்றிருக்கின்றாய்.

**மாலினி** :— எனக்கு நீங்கள் கூறும் உலகையே தெரி யாது. நான் ஒரு பெண்ணின் உருவத்தைத்தான் கண் ணாடியின்முன் நின்று பார்த்திருக்கிறேன். அவ்வுருவம் என்னைப்பற்றி எதுவும் பேசியதில்லை. ஆண்களிலும் என் தந்தையாரைத் தவிர உம்மிடம்தான் பேசியிருக்கிறேன். பலரை நான் பார்த்ததும் இல்லை. பலரைப் பார்க்கவேண் டும் என்ற எண்ணம் வருவதும் இல்லை. அழகியது எது? அழகில்லாதது எது என்று ஒப்பிட்டுக் காணும் வீண் முயற்சியும் நான் எடுப்பதில்லை. அல்லது அக்கற்பனை சக்தியே என்னிடம் அமையவில்லை என்றுகூடக் கூறலாம். ஐயோ, என் தந்தையார் விருப்பத்துக்கு மாறாக இவ்வுறவு இருக்குமோ என்று அஞ்சுகிறேன்.

**வீரராசே** :— மாலினி, நான் அரச மரபினன்; நான் எனக்கு இழிவையோ முடிவையோ தேடிக்கொள்ளும் நிலை யில் உள்ள ஒருவன் அல்லன், உன் பொருட்டே இக் கட்டையைச் சுமக்கின்றேன். உன்னைக் கண்டதும் என்

துணைவியாகக் கொண்டுவிட்டேன். உன் கட்டளையாகவே எதனையும் நிறைவேற்றிக்கொண்டிருக்கிறேன்.

மாலினி :— அவையெல்லாம் எனக்கு விளங்கவில்லை. அதிகமாக எனக்குப் பேசவும் தெரியாது. ஆனால் தாங்கள் கூறுவனவெல்லாம் உண்மையாயின் அவற்றை நான் மன மார உணர்கின்றேன் என்ற உண்மையை எவ்வாறு மெய்ப் பிப்பது என்பதும் எனக்குப் புலனாகவில்லை.

வீரராசே :— ஏ விண்ணே, மண்ணே, ஏனைய பூதங் களே; நான் கூறுவதற்கு நீங்கள்தான் சாட்சி. நான் இந்த மாலினியை எனது அன்புக்குரியவளாகக் – காதலியாகத் – துணைவியாக் – கொள்கின்றேன். இவளைவிட இவ்வுலகில் சிறப்பாக மதிப்பது வேறெதுவும் இல்லை. இது உண்மை. இது பொய்யாயின் எனது நற்குணங்கள் மாறட்டும். நான் பொய்யன். தீயன் என்று உலகோர் என்னை இழித் துரைக்குமாறு பஞ்ச பூதங்களே நீங்கள் பறை சாற்றுங்கள்.

மாலினி :— (கண்ணிலிருந்து வரும் நீரைத் துடைத் துக்கொண்டு) வாழ்க்கையின் இணைப்பு மகிழ்ச்சியின் ஊற்று. இப்போது நான் ஏன் அழுகிறேன்? பகுத்தறிவு என்னிடம் இல்லையா?

சயசீலன் :— (மறைந்து நின்று வாழ்த்தல்) ஒப்புயர் வற்ற இரண்டு உருவங்கள் தத்தம் நிலைமையைத் திருவருட் சூழலில் நின்று பரிமாறிக்கொள்கின்றன. உலகினர்க்கு எடுத்துக்காட்டாய் இவர்கள் வாழ்வு அமைய இறையருள் நற் சூழ்நிலையை என்றும் நிறுத்துவதாக.

வீரராசே :— ஏன் கண்ணீர்? மாலினி, உனக்கு என் னைத்தவிர வேறு ஒன்றும் கொடுக்க என்னிடம் இல்லை. நான் இப்போது மதிப்பற்றவனாக இருக்கிறேனே என்று கூசுகிறேன். ஆனால் என்னை உனக்குக் கொடுப்பதால் உன் னிடத்திலிருந்து ஒரு அரிய (குழந்தை) பொருளைப் பெற்

றுக்கொள்ளலாம். அப்பொருளின் மதிப்பு எதனையும் ஈடு செய்யும் என்று மட்டும் கூறிக்கொள்கின்றேன்.

**மாலினி :—** நாளடைவில் தானே நிகழவேண்டிய வற்றைக் கற்பனையாக்கிப் பேச முற்படுவதில் இப்போது பேசவேண்டியது மறந்துபோகக்கூடுமே என்று அஞ்சு கிறேன். அந்த அச்சமே எனக்கு இப்போது அஞ்சாமை யைத் தந்துவிட்டது. வெளிப்படையாகக் கூறின் நான் தங்களின் எல்லாமாக, காதலியாக, துணைவியாக, அடிமை யாக அமைந்திருக்க உறுதி கொண்டேன். ஆனால் அரச ராகிய தாங்கள் என்னை மணப்பதில் இடையூறு ஏற்பட் டாலும் நான் தங்களை மணந்துவிட்டேன்.

**வீரராசே :—** நான் உன்னை என் மனச் சிறையிலேயே அடைத்துவிட்டேன். இப்போது வெளியில் வைத்துப் பேசுகிறேன். நான் உன் கணவன், நீ என் மனைவி. எங்கே உன் கையைக் கொடு, இவ்விணைப்பில்தான்; கட்டுப்பாட் டில்தான்; முழு உரிமை உள்ளது. இன்று முழு உரிமை பெற்றோம். நிறைந்த கட்டுப்பாடும் கொள்வோம்.

**மாலினி :—** உறுப்பு, உடல், ஆவி யாவும் தங்களுடை யனவே. நான் இப்போது வீட்டிற்குச் சென்று விரைவில் திரும்புவேன். அரை நாழியில் மீள்வேன்.

**வீரராசே :—** அரை நாழிகையா?

**சயசீலன் :—** (தனக்குள்) இளமை! புதுமை! கருத்தின் இனிமையைப் பசி நிறைந்த அவர்கள் சுவைக்கும் அளவுக்கு முதிய நான் எப்படிச் சுவைக்க முடியும்? அச் சுவைபற்றி நினைக்கத்தான் முடியுமா? ஆனால் அவர்களை — அவர்களின் மகிழ்வைக் — காணுவதைவிட எனக்கு இவ்வுல கில் இன்பம் தருவது வேறொன்றுமில்லை. நான் இரவு வரும் முன் புத்தகம் பார்க்கவேண்டும். சில காரியங்களை முடிக்கவேண்டும்.

## அங்கம் 3. களம் 2.

(கலியன், கணேசன், திருக்கு மூவரும் வருதல்)

**கலியன் :—** நீங்கள் எல்லாம் உலகத்தையே சுத்திக்கிட்டு வருகிறீங்களா? இங்கே எப்படி வந்தீங்க?

**கணேசன் :—** எப்படியோ வந்தோம். எனக்கு முடிவு கழுமரம் என்று இருப்பதால் இந்தக் கடலில் சாகாமல் இத்தீவையடைந்தேன். என் தலையில் இன்னும் என்ன எழுதப்பட்டிருக்கோ?

**திருக்கு :—** அடே அடிமை, மச்சாவதாரம், உலகத்தை நாம் சுத்த நமக்கு யாருடா கட்டளை இட்டிருக்கிறார்கள்? உலகத்துக்குத்தான் கட்டளை இருக்கு அலுப்புச் சலிப்பின்றிச் சுத்திக்கொண்டே இருக்கவேண்டும் என்று. நம்ப கொஞ்சம் மருந்து (கள்) சாப்பிட்டா உலகத்தைச் சுத்தும்படி செய்யலாம். நாம் ஏன் சுத்தணும்?

**கணேசன் :—** ஏ கலியா, உன் வாயைத் திறந்து மனத்தில் இருப்பதைச் சொல்லப்பா? எதுவும் மனத்தில் மறைந்திருந்தால் நல்ல தூக்கம், பசி ஒன்றும் இருக்காதாம். உண்மையைச் சொன்னால் ஆயுள் அதிகமாகுமாம். உன் ஆயுள் காலத்தில் நல்ல உண்மையா ஒன்றிரண்டாவது சொல்ல வேண்டாமா!

**கலியன் :—** நானும் யாரிடமாவது சொல்லத்தான் எண்ணியிருந்தேன். சொல்லுகிறேன்.

**திருக்கு :—** என்ன கணேசா, இந்தப் புத்திகெட்ட மீனிடத்திலே என்னமோ கோட்டை பிடிக்கிற மாதிரி பேசுகிறாயே.

**கலியன் :—** பார்த்திங்களா கணேசச்சாமி, இவர் எப்போதும் என்னை இகழ்ந்து பேசுகிறார். நீங்கள் அதைக்

கேட்டுக்கொண்டே இருக்கலாமா? நான் உங்கள் ஆள் அல்லவா?

**திருக்கு** :— அடே, இந்த மீன் மனிதனுக்கு என்ன உணர்ச்சிடா வருது?

**கலியன்** :— பாருங்கள் என்னை மீன் என்றும் மனிதன் என்றும் எவ்வளவு இகழ்ச்சியாக இந்த ஆள் பேசுகிறார்?

**கணேசன்** :— அடே திருக்கு, நமது அரசாங்கத்தில் வம்பு சண்டை ஒன்றும் இருக்கக்கூடாது. சண்டை ஏற்பட்டால் என்னுடைய குடிமகன் – இந்த மச்ச மனிதனைக் – காக்கவேண்டி உன்னை அடுத்த மரக்கிளையில் தூக்கிப் போடுவேன். தெரியுமா? கலியா நீ சொல். ம் சொல்லு.

**கலியன்** :— இந்தத் தீவு முதலில் எனக்குச் சொந்தமாயிருந்தது. இங்கே மந்திரவாதி ஒருவன் வந்தான். அவன் என்னை அடிமையாக்கிக்கொண்டு என் தீவையும் பிடுங்கிக்கொண்டான். அவனிடத்திலிருந்து இத்தீவைப் பிடுங்கி உம்மிடம் தந்து உமக்கு அடிமையாயிருக்கத்தான் எனக்கு விருப்பம். அக்கொடியவனை உங்களால் தொலைக்க முடியும்.

**கணேசன்** :— கலியா, அப்படியானல் அவனைத் தொலைக்க உனக்கு ஏதாவது உபாயம் தெரியுமா? எங்கே சொல்லு.

**கலியன்** :— அது மிகவும் சுலபம். அவர் தூங்கிக் கொண்டிருக்கும் இடத்திற்கு நான் தங்களை அழைத்துச் செல்வேன். அவர் தூங்கும்போது தலையில் ஒரு ஆணியை அடியுங்கள்.

(மறைவாகக் காத்தவன் — அது உன்னால் முடியாது)

**கணேசன் :—** ஏ திருக்கு, இந்தா இந்த உதையை வாங்கிக்கொண்டு இந்த நினைவோடு இனிப் பேசாமல் இரு. இனிக் குறுக்கிடாதே.

(இரண்டு உதை தருகிறான் கணேசன் திருக்குக்கு)

**திருக்கு :—** ஐயோ நான் ஒன்றும் சொல்லவில்லையே. என் குரல்கூட உனக்குத் தெரியவில்லையா? நான் வாயைத் திறக்கவில்லையே.

**கலியன் :—** சாமி, இன்னும் இரண்டு உதை தந்து அவரை எட்டி விரட்டுங்கள். அவரைப் பார்த்தாலே எனக்குப் பிடிக்கவில்லை. அவர் பார்த்தாலே நம் காரியம் கெட்டு விடும்.

**கணேசன் :—** ஏய் திருக்கு, எட்டிப்போடா. கொஞ்ச நாழி கழித்து வாடா. கலியா, நீ சொல்லு.

**கலியன் :—** அவர் வழக்கமாகப் பகல் உணவு உண்டு நன்றாகத் தூங்குவார். அந்தச் சமயம் பார்த்து அவர் மண்டையை உடைக்கணும். ஆனால் அதற்கு முன்னாலேயே அவருடைய மந்திரப் புத்தகத்தை எடுத்து மறைத்து வைக்கணும். அவர் புத்தகம் போனாலே அவருக்கு மூளை போய்விடும். ஒன்றும் நடக்காது. பிறகு கட்டைதான் அவரு. அவருக்குக் காத்தவராயன் கூட்டமும் வேலை செய்யாது. அவருக்கு ஒரு பெண். அப்பெண்ணின் அழகு அவருக்குக் கொஞ்சம்கூட இல்லை. எங்கம்மாளைக்காட்டிலும் அவள் மிகவும் அழகி. அவள் உனக்குக் கிடைச்சால் அப்புறம்......

**கணேசன் :—** அடே கலியா, அந்த ஆளைக் காட்டு. உடனே அவனைக் கொன்று அந்தப் பெண்ணை அரசியாக்கி இந்த அரசன் இத்தீவுக்கு முடிமன்னனாகவேண்டும். ஏய் திருக்கு, நீயும் வாடா; உதை நினைவில் இருக்கிறதா? இந்த

இரகசியம் வெளியில் வந்தால் உடனே நல்ல உதைதான். கவனமாக இருங்கள் புறப்படுவோம். கலியா, வழிகாட்டு.

**கலியன் :—** இதுவே நல்ல சமையம்தான். சாப்பிட்டுத் தூங்குவாரு, காரியத்தை முடித்துவிடலாம் நாம்.

(காத்தவராயன் இவர்களறியாமல் — தனது தலைவன் சயசிலனிடம் சொல்வதற்காகப் போகுமுன் — சில பாடல்களை மறைவாகப் பாடுகிறான்)

**கலியன் :—** இத்தீவே இசைத்தீவு. எனக்கு மகிழ்ச்சி வரும்போது கொஞ்சம் இசையும் வரும். நாம் சேர்ந்து பாடிக்கொண்டு செல்லுவோமா? வழி நடையும் தோணுதல்லவா?

**கணேசன் :—** நீ சொல்லும்போது நான் வேண்டாமென்று சொல்லுவேன். கலியா, திருக்கு வாடா, சேர்ந்து மூவரும் பாடுவோம். தடியடி அடிப்போம் — இடியுதை தருவோம் — எதை எதை நினைத்தோம் — அது செய்து முடிப்போம், முடிப்போம், முடிப்போம்.

(காத்தவன் "எனையாளும் ஈசன் செயல், இவையெல்லாம் மாற்றிச் செயும்" "உங்கள் பாடலுக்குச் சந்தம் இதுடா. நீங்கள் பாடுவது தப்படா")

**திருக்கு :—** ஏய், இந்த ஒலி என்னதல்ல. தெய்வ ஒலி. இந்தத் தீவுத் தெய்வம் அது. ஓ, தெய்வமே என்னை மன்னி. கணேசனைக் கவனித்துக்கொள். எனக்கு ஒன்றும் தெரியாது.

**கணேசன் :—** திருக்கு, உதை வேணுமா? மன்னிப்பாவது தெய்வமாவது. உயிரோடு இருக்கிறவன் பேச்சாடா இது. செத்தவன் பேசுகிற பேச்சல்லவா இது? நான் எதற்கும் பயப்படமாட்டேன். அடே ஆகாய ஒலியே,

நீ மனிதனுயிருந்தால் எதிரே வா. பேயாயிருந்தால் ஓடிப்போ. கலியா, நான் பேய்க்குப் பயப்படமாட்டேன்.

**கலியன் :—** திருக்குத்தான் அப்படி. நீங்கள் எப்படிப் பயப்படுவீங்கள்.

**கணேசன் :—** எனக்குப் பயமே கிடையாது. அது எல்லாம் பிறப்பிலே அமைப்பு (இடி ஒலி வானில் உண்டாகிறது கேட்டு) அர்ச்சுனன் பேர் பத்து. அர்ச்சுனு காப்பாற்று. கலியா, இது என்ன, இத்தீவில் இசையொலியும் இடியொலியும் நம் பாடலை மிஞ்சுகின்றனவே.

**கலியன் :—** இத்தீவே இப்படித்தானுங்கள். ஒரே சமயத்தில் பல இசை ஒலிகள், இசைக்கருவிகளின் விதவிதமான ஒலிகள், மிருகங்களின் ஒலி, கடலின் அலை ஒலி, காற்ருெலி, மரங்கள் ஒடியும் படபட ஒலி, இடியொலி, எத்தனையோ ஒலிகள். ஆனால் இவை ஒருவருக்கும் ஒரு போதும் தீங்கு செய்ததில்லை. நல்ல மனத்திற்கு அதிக இன்பத்தைத் தருவதாகவே இருக்கும். சில சமயம் இசையைக் கேட்டுக்கொண்டே தூங்குவேன். ஆயிரம் வீணைகளின் சேர்ந்த ஒலி கேட்கும். உடனே விழித்துக்கொள்வேன். மீண்டும் இசையின் சக்தி என்னைத் தூங்க வைத்துவிடும். நாம் இப்போது பேசிக்கொண்டிருப்பது கனுவென்று சொல்லும்படியாக எனக்குச் சில சமையம் சில உண்மைகள் தோன்றும். நான் இத்தீவை விட்டு ஆகாயம் செல்வேன். மேகங்கள் அழகான அரண்மனைகள் கட்டித் தரும். பலவகை வாகனங்களைத் தரும். விரைவாக அவற்றை ஓட்டிக் காட்டும். நவ இரத்தினங்களையும் எனக்கு அள்ளி அள்ளிக் கொடுக்கும். நான் அப்படியே அனுபவித்துத் தெவிட்டிப்போவேன். இப்போது தூக்கம் வந்தால் நம்மை மறப்பதுபோல அப்போது விழிப்பு வந்து அவற்றை மறக்கச் செய்யும். இப்படியாக நான்........

**கணேசன் :—** சரிடா கலியா, எனது அரசாங்கத்தில் சங்கீதப் பைத்தியம் மற்ற எல்லாவற்றையுமே மறக்கடித்து விடும்போலல்லவா இருக்கிறது ?

**கலியன் :—** அக்கொடிய சயசீலன் தொலைந்த பிறகல்லவா தங்களுக்கு அரசாங்கம் வரும் ?

**கணேசன் :—** ஆமா, அதற்காகத்தானே போகிறோம். திருக்கு வாடா. கலியா, முன்னே சென்று வழி காட்டு ; நாங்கள் பின்னே வருகிறோம்.

## அங்கம் 3. களம் 3.

[தீவில் மற்றோரிடம்—இராசேந்திரன், இராசசிம்மன், அமணன், கோவிந்தமாறன், ஆதிநாராயணன், பராந்தகன், மற்றும் சிலர் வருதல்.]

**கோவிந்த:—** என்னால் இனி ஒரு அடிகூட எடுத்து வைக்க முடியாது. நாம் இதுகாறும் நடந்த தூரம் கணக்கிட முடியாத நீளம் இருக்கும். ஆனால் வழியோ சுற்றிச் சுற்றி வருவதால் தொடங்கிய இடத்திலேயேதான் நாம் இருப்பதாகத் தோன்றுகிறது. இனி என்னால் நடக்க முடியாது. எனது தோலின் கிழத்தன்மையை நீங்கள் அறிவதைக்காட்டிலும் எனது எலும்புகளின் கிழத்தன்மையை இப்போது நான் நன்கு உணர்கிறேன். எல்லாம் நொறுங்கிவிடும்போல் தோன்றுகிறது.

**இராசே:—** எனது நிலைமையும் அப்படித்தான். ஆனால் எப்படியும் வீராசேந்திரனைத் தேடிப்பிடிக்கலாம் என்ற நம்பிக்கையில் சுற்றினோம். அவன் கிடைக்கப்போவதில்லை. நம்பிக்கை கொண்டுள்ள நம்மைப் பார்த்துக் கடல் இகழ்ந்து சிரிக்கிறது. கமலத்தை இரங்கூனில் இழந்தோம். இன்று

கடலில் வீரராசேந்திரனையும் இழந்தோம். கரையிலும் இழப்பு, கடலிலும் நமக்கு இந்த நிலையா? மிகவும் களைப்பாக இருக்கிறது.

அமணன்:— (இராசசிம்மனிடம்—மறைவில் கூறுதல்) எடுத்தகாரியம் உடனே முடியாவிட்டால் கோழை துறவியாகக்கூட ஆகிவிடுவான். நாம் முயன்றால் பலிக்காமலா போகும். முயன்றுகிவிட்டது. இனி முடித்துத் தீர்க்க வேண்டுமல்லவா?

இராசசி:— இதைப்பற்றி மிகுதியாகச் சிந்தித்தமையால் என்னையே நான் மறந்திருந்தேன். சமையம் ஏற்படும் போது கவனமாகக் காத்திருந்து முடிக்கவேண்டியதுதான்.

அமணன்:— இன்றிரவே முடிக்க வேண்டியதுதான். அவர்கள் நடை மெலிந்து சோர்வுற்றிருக்கின்றனர். இந்த வாய்ப்பு நமக்காகவே ஏற்பட்டிருக்கின்றது.

இராசசி:— இன்றைக்கு நிச்சயமாக முடித்துவிடுவோம்.

(அப்போது திடுமென அங்கு இசையரங்குடன் ஒரு பெருஞ்சோற்றுவிழா நிகழ்கிறது. தூக்கத்திலிருந்த மக்கள் அனைவரும் எழுப்பப்படுகின்றனர். பற்பல உருவங்கள் எண்ணற்ற பண்டங்களைப் பரிமாறி யாவரையும் விருந்தோம்புகின்றன.)

இராசே:— ஆகா அரிய பாடல். இனிய இசை; யாவரும் கேளுங்கள். நண்பர்களே நோக்குங்கள். மதிக்கமுடியாத உண்டி. எண்ணற்ற உணவுப் பண்டங்கள். என் உடலும் உயிருமாக இருந்த என் மக்களில் நம்பிக்கை யிழந்த நான் இவற்றையெல்லாம் நம்புவதா? இவை உண்மைதானா?

கோவிந்த:— நானும்தான் காண்கின்றேன். நான் இனி எதையும் நம்பவேன். நம்பிக்கை இல்லை என்ற ஒன்றைத்

தவிர மற்ற யாவற்றையும் நம்புவேன். ஒற்றைக் கொம்புக் காட்டு மிருகம், அரேபியப் பாலைவனம், பச்சைமரம், தன்னை எரித்துக்கொண்ட பறவை, மீண்டும் தானே குஞ்சாய்த் தோன்றுதல், இவற்றையெல்லாம் நான் நம்புவேன். மெய் யான உலகில் பொய்யே இல்லை. நம்பாதவன் என்னிடம் வந்தால் அவனை நம்பும்படி உடனே செய்வேன். என்னைப் பார்த்தவன் எதனையும் நம்பித்தான் ஆகவேண்டும். நாடோடி கள் பல விந்தைகளைக் கூறுவார்கள். திண்ணைத் தூங்கிகளும், சோம்பேறிகளும் அவற்றை நம்புவதில்லை. நாடோடிகள் பொய் சொல்வதில்லை. அவர்கள் கண்ணில் எவ்வளவோ படு கின்றன. அவற்றை நம்பச் சோம்பேறிகளுக்கு மனமும் இல்லை, அறிவும் இல்லை. அக்குறை யாரைச் சேரும்? நம் பாதவர் நம்முன் வருதல் வேண்டும்; வந்தால் எல்லாம்......

**அமணன்** :— நாம் இங்கு பார்த்தவற்றையெல்லாம் நாகை சென்று மக்களிடம் கூறினால் நம்புவார்களா? கடலின் நடுவில் ஒரு தீவு உளதென்றால் நம்புவார்களா? அத்தீவில் காற்றில் உலவும் காத்தவராயர் உண்டென்றால்— காற்றே உயர்ந்த இசையரங்கு நடத்துகிறதென்றால்— விண்ணிலிருந்து எண்ணற்ற பண்டங்கள் வருகின்றன போகின்றன என்றால்— விலையில்லாமல் எல்லாப்பொருள் களையும் இனமாக யார் யாரோ கொண்டுவந்து உதவுகின் றனர் என்றால் யார் நம்புவார்?

**இராசசி** :— என்றால் இவற்றை நம்பவே முடியாது; எடுத்த காரியத்தை நம்பிக்கையோடு முடிப்பதற்கு நம்பிக்கையான சூழ்நிலை பெறுதலில் நம்பிக்கையற்ற நான் இவற்றையெல்லாம் எப்படி நம்புவேன்? நம்ப முடியாது.

**கோவிந்த** :— நீங்கள் மூவரும் நம்பிக்கையின்றி உளற வேண்டாம். நம் அனைவருக்குமே பசி மிகுந்திருக்கிறது. பண்டங்கள் நிறைய இருக்கின்றன. எடுத்துண்ணலாமே? ஏன் அச்சம்? சாப்பிடுங்கள்.

(யாவரும் உண்ணத் தொடங்குகின்றனர் — இராசேந்திரன் — இராசசிம்மன் — அமணன் மூவருடைய உணவுகள் மட்டும் சிதறுகின்றன. கைக்கெட்டியது வாய்க்கு வராமல் துன்புறுகின்றனர். இழிநிலையடைகின்றனர்.)

**விண்ணிலிருந்து காத்தவன் பேசுதல் :—** நீங்கள் மூவரும் கொடியவர்கள், பாவிகள், உங்கள் மனம்போல் உங்கள் நிலையும் அமைய வேண்டியதுதான். நம்பிக்கையற்றவர்கள், துரோகிகள், சதிகாரர்கள். நீங்கள் உயிருடன் வாழத் தகுதியற்றவர்கள். ஆதலால்தான் மக்கள் வாழும் இடத்தில் நீங்கள் இல்லை. இத்தீவில் இருக்கிறீர்கள். நீங்கள் சரகவும் புண்ணியம் செய்யாதவர்கள். இப்பெரிய கடல் உங்களை உள்ளே வைத்துக்கொள்ள இசையாமல்தான் இங்கு ஒதுக்கிவிட்டது. நீங்கள் தற்கொலை செய்து கொண்டால்கூட உங்கள் உயிரைப் போக்க எந்தக் கருவியும் உங்களுடன் ஒத்துழைக்காது. கோவிந்தமாறர் மிகவும் நல்லவர். அவருக்கு எதிலும் நம்பிக்கையுண்டு. அவர் உணவில் சிதைவில்லை. அவர் வாழ்வும் அவர் மனம்போல் நன்கு அமையும், அவர் வாழ்வாராக.

(இராசேந்திரன் — இராசசிம்மன் இருவரும் கத்தியை உருவிக்கொண்டு ஏ காற்றே, உன்னை வெட்டுவேன் என்றனர்.)

**விண்ணிலிருந்து காத்தவன் :—** ஏ சதிகாரர்களே, நாங்கள் உங்களின் தலைவிதியின் பேரால் பாபத்தின் சின்னமாக உங்களுக்குப் பலன்தர வந்திருக்கின்றோம். உங்கள் கத்திகளும் — கத்திகளைக் கூராக்க உதவிய தீ முதலிய பூதங்களும்கூட எங்களுடன் ஒத்து உங்களைத்தான் தண்டிக்க முற்படும். வஞ்சியிலிருந்து சயசீலனைப் புறப்படுத்தி ஓட்டைப் படகில் வைத்துக் கடலில் விட்டீர்கள். பச்சிளங் குழவியையும் உடன் போக்கினீர்கள். இரைந்துகொண்டிருக்கும் கடல் அவர்களுக்கு இரக்கம் காட்டியது; காப்

பாற்றியது. எங்கும் நிறைந்த இறைவன் அறிந்தே பலன் தருகிறான் போலும். இராசேந்திரா, மகனைப் பிரிந்தாய், மனமுருகித் துன்புற்று உனது பாவத்தை உண்டு தீர்க்கின்றாய். உயர்ந்த சாவு உனக்கு எப்படிக் கிட்டும்? எஞ்சிய பாவத்தை உண். இத்தீவில் உனக்கு நற்கதி கிட்டும். என்னைப்போன்று என் சகாக்கள் சயசீலனின் ஆட்களாக இங்கு அவர் குறிப்பின் வழி நின்று பணி புரிகின்றோம். இவையெல்லாம் அவர் அறிந்ததுதான். அவர் கட்டளையின் பேரில்தான் இவையெல்லாம் யாம் நிகழ்த்தினோம். நிகழ்த்துகின்றோம். சயசீலனிடம் சென்று வருவேன்.

**காத்தவன் :—** (சயசீலன் முன்னின்று,) வணங்குகின்றேன். எல்லாம் ஒருவாறு நடைபெற்றது.

**சயசீலன் :—** எனது மந்திரசக்தியும் நன்கு தன் வேலையை முடித்தது. பகைவர்களின் தீவினையும் முடியும் நிலையிலுள்ளது. காத்தவா, வீராசேந்திரனையும் மாலினியையும் பார்த்துவிட்டு வருகின்றேன்.

**இராசே :—** கோவிந்தரே, கடலின் எதிரொலியே காற்றிலிருந்து வந்ததாக நான் உணர்கிறேன். எம்மைத் துப்பிய கடல் எம்மைப் பழிதூற்றுகிறது. அதன் எதிரொலிதான் நான் கேட்டது. எனது மகன் கடலடியில் இருந்தால், நான் கடலுள் சென்று அவனைப் பார்த்தேயாக வேண்டும் நான் செய்த தவற்றினைப் பஞ்ச பூதங்களும் உணர்த்துகின்றன எனக்கு. சயசீலனின் தன்மையைப் — பெருமையை – எனது தன்மையுடன் ஒத்திட்டுப் பார்த்து நான் நடுங்குகின்றேன்.

**இராசசி:—** அமணரே, உம் உள்ளம் எம்மிடம் என்ன பேசுகிறது? என்னையும் ஒளித்து இரகசியம் பேசுகிறீரா?

**அமணன் :—** என்னைக் கண்ணாடியாக வைத்து நீங்கள் நும்மனத்துடன் பேசுவதை நான் நல்ல நிலையில் இருந்து உணர முற்படுகிறேன்,

**கோவிந்த:—** (தனக்குள்) 'வினையிட்டவர் வினையறுப்பார்' என்பது செய்மையிலோ அணிமையிலோ உண்மை தான் என்பது உயர்ந்தோர் முடிவு. இம்மூவரும் உணரத் தொடங்கிவிட்டார்கள். மனத்தில் அறுவடை நிகழ்கின்றது. எனது கிழத்தனத்தில், பாவம்! இவர்கள் மூவரும் தற்கொலை செய்துகொள்ளாதபடி காக்கும் பொறுப்பும் ஏற்க வேண்டியதாகிறது.

## அங்கம்—4. களம்—1.

(சயசீலன்வீடு-சயசீலன், மாலினி, வீரராசேந்திரன் நேர்தல்)

**சயசீலன்:—** நான் உமக்கிட்ட பணிகள் கடினமானது தான். கடினமான பணியில்தான் தெவிட்டாத இன்பம் உளது. நீவிர் செய்தது எனக்காகச் செய்த பணியானல் நான் உமக்கு எனது உடலின் சக்தியை எனது உயிரின் சின்னத்தை அதன் கைமாறுகக் கொடுத்திருக்கிறேன். நான் பஞ்சென்ருல் அவள் நூல், அவள் நூலென்ருல் நான் துணி. இத்தீவில் எம்மை இதுகாறும் உயிருடன் காத்துவந்த காரணம் இன்று உம்மை அடைகின்றது. உமது அன்பு சோதனைகளில் தோல்வியடைந்திலது. தாங்கள் நன்று தேறியுள்ளீர். இத்தீவில் இயற்கையே சாட்சியாக நீவிர் மேற்கொண்ட மணத்தை நான் உறுதி செய்கின்றேன். உமது வாழ்க்கைத்துணை உமது வாழ்வுக்கு முதலாக அமையும் சிறப்புடையது. நான் என் மகள் என்பதற்காகப் புகழ்வதென்ருல் நீவிர் என் மருகராகியபின் நும்மைப் பிரித்துப் பேசும் குறைபாட்டினை நான் அடைவேன். ஒன்றன் சிறப்பினை உணர்ந்தபின் வாய்ப்பு வந்தபோது அதனை உணர்த்தாதிருப்பது தவருகுமென்றே சொல்ல முற்பட்டேன். அவளது சிறப்பினை நான் எவ்வளவுக்குச் சொல்ல முற்பட்டாலும் அவள் அதற்கும் மேம்பட்டே விளங்குவள் என்பதனை நீர் உம் அநுபவத்தில் அறிதல் கூடும். அவளது

குணச்சிறப்பின் போக்கினை—விரைவினை—எனது சொற்றொடரின் தளர்நிலை பிடிக்க முடியாது மெள்ளப் பின்செல்லும்; பின் சலித்து நின்றுவிடும்.

**வீரராசே:—** தாங்கள் கூறியவற்றை உண்மையாக உணர்கின்றேன். குண விதைகளின் தொகுப்பாக நான் மாலினியை மதிக்கின்றேன்: மறையொலி விண்ணிலிருந்து இதனை மறுத்தாலும், மறைக்க முயன்றாலும் நான் கண்ட உண்மையினின்று பிறழேன்.

**சயசீலன்:—** வீராசேந்திரரே, மாலினியை நான் உமக்குக் கொடுத்ததாகக் கொள்ளினும், அன்றி நீங்களே ஒருவர்க்கொருவர் எதிர்ப்பட்டு அடைந்ததாகக் கொள்ளினும், சமுதாய விதிப்படி சில சடங்குகள் நடைபெறவேண்டும். அவை நிகழ்வதற்கு முன் நீங்கள் உடற் கலப்புச் செய்தல் தகாது. உடற்புணர்ச்சி நிகழின் சமூகம் உங்களை இகழும். இறைவன் அருள் மாறும். நல்ல உயிர்க்காற்றுக்கூட உங்கள்மேல் வீசாது. உங்கள் மணம் பயன் பெறாது. பிள்ளைப்பேறடையமாட்டீர்கள். நீங்கள் ஒருவர்க்கொருவர் கலாம் விளைத்து வாழ்வைப் பாழ்படுத்திக்கொள்வீர்கள். உங்கள் நல் வாழ்வுக்காக நீங்கள் இருவரும் கவனமாக இருக்க வேண்டும் என்பதற்காகவே அறிவு கொளுவினன். கவனமாக இருப்பீர்களா ?

**வீரராசே:—** நான் விரும்புவது எளிமை, அமைதி. இவற்றில் அமையும் வாழ்வே யாங்கள் துய்ப்பதாக இருக்கும். காமத்தை ஊட்டும் இருளிலும் எமது அறிவுச்சுடர் விளங்கும். தங்கள் அறிவுரை எங்கள் வாழ்வுக்கு அறத்தின் அச்சு. எங்களுக்கு அச்சாக உள்ள அத்தீப் பிழம்பில் அற்பமான காம உணர்வும், பிற ஆசைகளும் தானே உருகிவிடும். எம்மதிப்பினை நாம் இழக்கமாட்டோம். இரவு இருளாக நீண்டுகொண்டிருப்பதாகவே நாங்கள் உணர்ந்தாலும் தங்கள் அறிவுரையை நாங்கள் என்றும் மறவோம்.

**சயசீலன் :—** நல்லது நீங்கள் இருங்கள். மாலினி, உளங்கலந்து பேசிக்கொண்டிருக்கலாம். கிணற்று நீரை வெள்ளம் கொண்டுபோகாதல்லவா? நான் தங்களுக்குச் சிறிது விளையாட்டுக் காட்ட எண்ணுகிறேன். நீங்கள் எந்த நேரத்திலும் உங்கள் இளமை வேகத்தில் ஒழுக்கம் தவறல் கூடாது. இதனை நான் மீண்டும் மீண்டும் வற்புறுத்த வேண்டியவனாக இருக்கிறேன்.

**வீரராசே :—** கவலை வேண்டாம். எனது உளத்தில் தூய்மையென்னும் பனிக்கட்டி நிறைந்திருக்கின்றது. ஈரல் குலையில் உண்டாகும் காமத்தீயை யான் விரும்பாதபோது அது தானே அணைத்துவிடும்.

**சயசீலன் :—** நல்லது வருகிறேன். (சயசீலன்—காத்தவனைத் தனியிடத்துக்கு அழைத்தல்)

**காத்தவன் :—** ஐயா, இதோ வந்தேன். நான் செய்ய வேண்டிய பணி என்ன?

**சயசீலன் :—** காத்தவா, நீ அந்த அசட்டு மிருகம் கலியன், திருக்கு, கணேசன் மூவரையும் இங்குக் கொண்டு வந்து சேர்க்கவேண்டும். ஆனால் அதற்குமுன் எனக்குள்ள ஓர் அற்ப ஆசையை விரைவில் நிறைவேற்றல் வேண்டும். அந்த இளைஞர் இருவருக்குமுன் எனது மந்திர சக்தியின் பெருமையைச் சில விளையாடல்கள்மூலம் மெய்ப்பிக்க வேண்டும். ஆதலால் நீ சென்று வேண்டி இந்திராணியுடன் பூமாலிகாவையும், கூலலட்சுமியையும், அவர்கள்முன் அழைத்து வருதல்வேண்டும். இதுவே முதலில் செய்ய வேண்டிய பணியாகும்.

**காத்தவன் :—** இதோ, போ, வா என்பதற்குள் போய் அழைத்து வருகிறேன். (இந்திராணியின் அனுமதி பெற்றுப் பூமாலிகாவும், கூலலட்சுமியும், வீரராசேந்திரன்—மாலினி—இருவரும் காணுமாறு நின்று, கேட்குமாறு பேசிக் கொள்கின்றனர்)

**பூமாலிகா** :— கூலலட்சுமி, சயசீலனது தவத்தால் இவ்விளம்பருவக் காதலர்கள் நல்லொழுக்கத்தை மேற்கொண்டுள்ளனர். இவர்கள் நல்லொழுக்கமே நமக்கு அருளுள்ளம் தரும். அதன் மறுமலர்ச்சியாக நாட்டிற்கு நெல், கேழ்வரகு, கம்பு, சோளம், பயறு, உளுந்து, துவரை, கொத்தமல்லி, கரும்பு, வாழை, தென்னை, மா, பலா யாவும் நற்பலன் தந்து செழிப்பினை உண்டாக்கும். தரிசு நிலங்களில் புல் மிகுந்து பசுக்களும் மேதியும் வயிறுர மேய்ந்து நாட்டிற்கு நல்ல பால் தரும். காய்கறித் தோட்டங்கள் குலுங்கக் குலுங்கக் காய்க்கும். இவையெல்லாம் விரைவில் எதிர்பார்க்கலாமல்லவா ?

**கூலலட்சுமி** :— பூமாலிகா, எல்லாம் இந்திராணியம்மாளின் திருவுள்ளத்தாலும் உனது ஒத்துழைப்பாலுமே நிகழ்கின்றன. உனது வண்ணங்களின் சிறப்பால்தான் எல்லாம் சிறப்புறுகின்றன. வெறும் நிலங்களில்கூட நீ அழகாகப் பூத்து இன்பம் தருகின்ருய். நல்ல பூக்களில்லாவிட்டால் காய்கள் ஏது ? பலன் மிகுவதெப்படி ? மக்கள் மகிழ்வதெப்படி ? மஞ்சள் நிறத்தேனும் பிற நிறங்களின் உயிர்ச் சத்துக்களும் உலகோர்க்குச் சாகா வரம்தர வல்லன அல்லவா ? இப்போது இங்கு நாம் செய்யவேண்டிய வேலையென்ன ? அதைவிட்டு என்னவோ பேசுகிரேமே ?

**பூமாலிகா** :— இவ்வுண்மைக் காதலர்களிருவரையும் வாழ்த்தியருளவே வந்திருக்கிரேம். ஆனல் இந்திராணியம்மாளும் வந்தபிறகு வாழ்த்தெடுப்பது நல்லதல்லவா ?

**கூலலட்சுமி** :— ஆம். நல்லதுதான், ஆனல் அவர்கள் பின் மதனும் இரதியும்கூட வாழ்த்துக்கூற வருவார்களோ என்று அஞ்சுகிறேன். என்னையும் என் கணவனையும் பிரித்துவைத்து உலகின் வளத்தையே குறைத்தார்களல்லவா ? அதுமுதல் அவர்கள் முகத்திலேயே விழிப்பதில்லை யென்று சூளுரை கூறியிருக்கிறேன். அதுபற்றித்தான் சிறிது......

**பூமாலிகா** :— அதுபற்றிக் கவலையோ அச்சமோ வேண்டாம். இந்திராணியம்மாள் சைனுப்பக்கம் சென்றிருக்கிறுர்கள். அவர்கள்பின் மதனும் இரதியும் சென்றுவிட்டனர். அவர்கள் கைவரிசைக்கு அதுதான் தற்போது ஏற்ற இடமென்று சென்றிருக்கின்றனர். இப்போது அவர்கள் திரும்பமாட்டார்கள். இதோ, நல்லொழுக்க நடை, இந்த நடையழகு வேறு யாருக்கு? இந்திராணியம்மாள் தான், வந்துவிட்டார்கள்.

**இந்திராணி** :— அருமைத் தங்கைகளே, நீங்கள் இங்கு முன்னரே வந்துவிட்டீர்களா? நாம் இக்குழந்தைகளை வாழ்த்துவோம். தளரா இன்பம், நீண்ட வாழ்வு, நல்மக்கட்பேறு இவை நமக்கு உண்டாவதாக. நீங்களும் வாழ்த்துங்கள்.

**கூலலட்சுமி** :— குழந்தைகளே, நீங்கள் அன்புடன் நோக்கும் நிலம் செழித்துப் பலன் தருவதாக. எப்போதும் வளத்துடன் வாழ்வீர்கள். கூலம் நிறையும். மரங்கள் பழுக்கும். உங்களைக் கண்டவர்களைக்கூட வறுமை காணுதொழிவதாக

**பூமாலிகா** :— மணமலிந்து, குணநிறைந்து வாழ்வீர்களாக.

**வீரராசே** :— நான் காண்பதெல்லாம் தெய்வக் காட்சி, கேட்பனவெல்லாம் நிறை மொழிகள். மாலினி, நும் போன்று ஒரு துணையும், நும் தந்தையார் போன்று ஒரு சக்தி வாய்ந்த மாமனுரும் கிடைத்தால் இந்திரலோகம், சத்தியலோகம், வைகுண்டம், கைலாயம் இன்னும் மனிதனின் கற்பனையில் தோன்றும் எந்த உலக உயர்ந்த இன்பமும் நமது இன்பத்துக்குக் கீழ்ப்பட்டதாகவே இருக்கும்.

**சயசீலன்** :— வீரராசேந்திரா, சற்றுப் பொறுத்திருங்கள். இடையிடையே பேசினுல் என் மந்திரசக்தி சிறிது குறைய நேரினும் நேரலாம்.

(இந்திராணியின் ஏவலால் பூமாலிகா சென்று நதிகளை யும் குடியானவர்களையும் அழைத்து வருகிறாள்)

**கூலலட்சுமி** :— காவேரி, வைகை, பொருநை, சிந்து, கோதாவரி, கங்கா, யமுனா, யாவரும் வாருங்கள். இந்தி ராணியம்மாளின் உத்தரவு—ஒப்பற்ற காதலின் சேர்க்கை— இக்காதலர்களின் தெய்வ வாழ்வுக்கு நீங்கள் ஒவ்வொரு வரும் வாழ்த்துக் கூறிவிட்டுச் செல்லுங்கள். (ஒவ்வொரு வரும் வாழ்த்துக் கூறிவிட்டுச் செல்கின்றனர்.)

குடியானவர்களே, வைக்கோல் தொப்பியை மகிழ்வின் அடையாளமாகத் தலையில் மாட்டிக்கொண்டு பள்ளுப் பாடுங்கள். சிறிது கைகோத்தாடுங்கள். இவர்களின் தெய்வக் காதலின் எதிர்ப் பலனாக நாடு செழிக்கும். நீங்கள் மலைமலையாகக் கூலக்குவியல் பெறுவீர்கள். (யாவரும் ஆடு கின்றனர்)

**சயசீலன்** :— (திடுமென ஒரு ஒலி கேட்டுச் சிறிது நடுக்கத்துடன்) நிறுத்துங்கள். இப்போது நீங்கள் அனை வரும் செல்லலாம். உங்கள் காரியம் முடிந்தது. (அனை வரும் விடைபெற்றுச் செல்லுகின்றனர்) எனது சக்தியின் பெருமையில் என்னையே மறந்து விட்டேன். அக்கலியன் இரண்டு ஊதாரிகளைக்கொண்டு என்னைக் கொல்ல எண்ணி யிருக்கிறான். அவர்கள் குறித்த நேரமும் வந்துவிட்டது. அதைக் கவனிக்கவேண்டும்.

**வீரராசே** :— மாலினி, மாமாவுக்குத் திடுமென ஏதோ மாறுதல் தோன்றிவிட்டது. சற்றுக் கோபம்கூடக் காணப் படுகிறது. வந்தவர்களுக்கு நல்ல வரவேற்புமில்லை. மரியாதையுமில்லை. பிரிவிலும் இனிமையில்லை. 'ஊதாரி களைக்கொண்டு கொல்ல' என்று என்னவோ தன்னைப் பற்றியும் கூறிக்கொண்டார். சக்தி நிறைந்த இவர் இவ் வாறு கூறிக்கொள்வதின் பொருள் எனக்கு ஒன்றும் விளங்கவில்லை.

**மாலினி** :— இதுகாறும் என் தந்தையாரை இந்த நிலையில் கண்டதே இல்லை. கோபமாகத்தான் இருக்கிறார்.

**சயசீலன்** :— மருகரே, நீங்கள் ஏன் கவல்கின்றீர்கள். நீங்கள் எதுபற்றியும் குழப்பம் அடையவேண்டுவதில்லை. மகிழ்ச்சியுடனே இருங்கள். இங்கு வாழ்த்துக் கூறியவர்களும், கை கொத்தாடியவர்களும் யாவரும் எனது மந்திர சக்தியால் தோற்றம்கொண்டு வந்த காத்தவராயர்களின் கூட்டமேயாம். உருவத்துடன் வந்து வாழ்த்துமாறு எண்ணினேன் நடந்தது. மாறி மீண்டும் காத்துடன் கலக்குமாறு நினைத்தேன் நிகழ்ந்தது. எனது முன்னேற்பாடான சில திட்டத்தை நடத்திக் காட்டினேன். இவை எல்லாம் உங்களுக்குக் கனவுபோல் தோன்றுகின்றனவா? அப்படியானால் விண்ணளாவும் கோபுரங்களும், கண்கவரும் விசாலமான அரண்மனைகளும், எண்ணற்ற மாளிகைகளும், ஏன், மலைகளும், தீவுகளும், பூமியும் எல்லாம் மறையக்கூடியவைதான். காலன் அறிந்தது. காலம் கூறும் உண்மைதான் இவை. கனவு ஒரு நுண்பொருள். நிலையற்றது. மக்களாகிய நாமும் நுண்பொருள்களின் சேர்க்கைதான். நிலையற்றவர்கள்தாம். நம் வாழ்நாள் ஒரு தூக்கத்தில்தான் முடியவுளது. எனக்கு அயர்ச்சியாக இருக்கிறது. நான் தளர்ந்த வயதினன் அல்லவா? அயர்ச்சி, தளர்ச்சி என்ற எனது வார்த்தைகளைக் கேட்டு நீங்கள் கவலையடைய வேண்டாம். எனது அறையுள் சென்று நீங்கள் இருவரும் சற்று ஓய்வு கொள்ளுங்கள். நான் சற்று உலவி வருவேன்.

**மாலினி** :— அப்பா, எங்களுக்கென்ன ஓய்வு. தாங்கள் சுகமாக இருந்தால் அதுவே எங்களுக்கு அமைதி, இன்பம் எல்லாமாகும். தாங்கள் எங்கு உலவப்போகிறீர்கள்? இங்கேயே சற்றுத் தங்கி இளைப்பாறுங்கள்.

**சயசீலன்** :— என்னைப்பற்றிய பொறுப்பு உங்களிடம் நான் கொடுக்கவில்லையே. நான் சொல்வதைக் கேளுங்கள். நீங்கள் எனது அறைக்குச் செல்லுங்கள்.

(அவர்கள் சென்றதும்—அறைக்கு வெளியில்)

**சயசீலன்:** காத்தவா, கலியனைக் காணவேண்டாமா?

**காத்தவன்:—** ஐயா, வாழ்த்து நடந்தபோதே இது பற்றிச் சொல்லவெண்ணி யெண்ணி வாய்ப்புக் கருதியே வாளா இருந்துவிட்டேன். கலியன், திருக்கு, கணேசன் மூவரையுமே எனது இசையொலியால் இழுத்துவந்தேன். காதை விரைத்து, மூக்கைத் துறுத்திக், கண்கொட்டாது தொடரும் மிருகங்கள்போல் கல்லிலும் முள்ளிலும் ஒலியைத் தொடர்ந்து வந்தனர். உடை கிழிந்து, உடம்பெல்லாம் கீறல்கொண்டு நமது அறைக்கும் பின்னால் உள்ள கும்பியில் பாசி படர்ந்த குட்டையில் நிற்கின்றார்கள். ஆனால் நாற்றம் பொறுக்காமல் அதினின்றும் இப்போதுதான் கரையேறுகிறார்கள்.

**சயசீலன்:—** சரி, அவர்கள் கண்ணில் படும்படி இங்கு ஒரு கொடியைக்கட்டி அதில் நல்ல உடைகளைப் போட்டுவை. தவறுதல் காணாமல் தண்டனை கொடுக்கக்கூடாதல்லவா?

**காத்தவன்:—** கணத்தில் செய்துவைப்பேன். ஆனால் கலியன் அவர்கள்மூலம் தங்களைக் கொலை செய்வதற்குப் 'பகீரதப் பிரயத்தனம்' செய்கிறான்.

**சயசீலன்:—** அவனை நல்வழிக்குக் கொண்டுவர எவ்வளவோ முயன்றேன். அவனை ஒரு மனிதனாக்கத் திட்டமிட்டேன். எல்லாம் வீண். அவனைத் திருத்தும் அளவில் என்னால் ஒன்றும் செய்ய முடியவில்லை. ஆண்டு முதிர முதிர அவன் உடலில் தடிப்பு ஏற ஏற அவனது குணமும் முரண்பட்ட வழியிலேயே வளர்கின்றது. பாவம் அவனும் அவனுடன் சேர்ந்தவரும் அனுபவிக்க வேண்டியவற்றை அனுபவித்துத்தானே ஆகவேண்டும் விரைவில் சென்று உடைகளை மாட்டிவை.

(உடைகள் தொங்கவிடப்பட்டுள்ளன — அதற்கு முன்னால் கலியன், திருக்கு, கணேசன் மூவரும் பழுதுபட்ட உடைகளுடன் வருகின்றனர்.)

**கலியன்:**— மெதுவாக நடவுங்கள். சுண்டெலிக்குக் கூடக் காதில் விழக்கூடாது. அவர் தூங்கும் அறைக்கும் பக்கத்துக்கு வந்துவிட்டோம். கத்தியைத் தயாராக வைத்துக் கொள்ளுங்கள்.

**கணேசன்:**— கலியா,என்னடா எவ்வளவு தொல்லேடா. உடம்பெல்லாம் ஈரம்; நாற்றம். உடையெல்லாம் கிழிஞ்சு போயி எவ்வளவு துன்பமடா?

**திருக்கு:**— ஏய் இருபிறப்பு – கலியா – உன் பேச்சைக் கேட்டு ஒருவனும் உருப்பிடப்போவதில்லை. எனக்கு நன்ருகத் தெரியுதடா?

**கலியன்:**— ஐயா, தயவுசெய்து கொஞ்சம் பொறுமையாக இருங்கள். உங்களுக்காக நான் கொடுக்க இருக்கும் இலாபம் உங்கள் கையில் கிடைத்துவிட்டால் இத்தொல்லேயெல்லாம் உடனே மறைந்துபோம். தயவுசெய்து அமைதியாக இருங்கள். நடுநிசி, எல்லாம் அமைதியாக இருக்கிறது. நமது காரியத்தை விரைவில் முடிக்கவேண்டும்.

**திருக்கு:**— சேற்றிலே நினேந்தது பெரிதல்ல. காய்ந்து போகும். உடைகள் கிழிந்துவிட்டன. அது போனலும் போகட்டும். எனது கையிலிருந்த சாராயப் புட்டியை இழந்துவிட்டேனே. அதைத் தேடியெடுத்துக்கொண்டு வரப்போகின்றேன் நான்.

**கணேசன்:**— கிடைக்கப்போகும் பலாக்காயை நம்பிக் கிடைத்திருந்த களாக்காயை விட்டது மூடத்தனம். அதைத் தேடியெடுக்கத்தான் வேண்டும்.

**கலியன்:—** எனது இராசக்களா, பெரிய ராசனே, இது தான் வழி. இக்குகை வழியாக அமைதியாக உள்ளே போனால் கொஞ்சம் பின்னால்தான் அவர் அறை உளது; அவர் தூங்குவார். கத்தியால் கழுத்தை வெட்டவேண்டியதுதான். அவர் மந்திரமெல்லாம் தொலைந்துபோகும். அப்புறம் அரசாங்கம் உங்களுடையதுதான். யாருக்கும் நீங்கள்தான் ராசா. இந்தக் கலியன் அப்புறம் உங்கள் ஆள் தான். உயிர் உள்ளவரை கலியன் உங்கள் காலடியில்தான் இருப்பான். இது சத்தியம்.

**கணேசன்:—** எங்கே கலியா, உன் கையைக்கொடு. எனது எண்ணத்தில் இரத்தக்கறை படிந்துவிட்டது. இனிமேல் காரியம் பெரிதல்ல.

**திருக்கு:—** கணேச மகராசா, தும்பிக்கை ஆள்வாரே, இதைப் பாருங்கள். புதிய ஆடைகள் தொங்குகின்றன. இதில் ஒன்றைக் கட்டிக்கொண்டுதான் நான் புட்டியைத் தேட எண்ணுகிறேன். புதிதாக அரசாகும் நீங்கள் கட்டாயமாக நல்ல உடைகளைக் கட்டிக்கொள்ளுங்கள். ஆடையில்லா மனிதன் அரை மனிதன். மனித நிலைக்கே குறைந்துவிட்டால் ராசா ஆவது எப்படி?

**கலியன் :—** அற்ப உடைகளில் ஆசை எதற்கு? திருக்கு, அரசாங்கம் வரும்போது ஆடையில் உனக்கென்ன பைத்தியம்?

**கணேசன் :—** அடே திருக்கு, அந்தச் சட்டையில் கை வைக்காதேடா. அது அரசன் போட்டுக்கொள்ளவேண்டிய சட்டை. அது என்னைச் சேர்ந்தது. எனக்காகவே இருக்கிறது. அதை இன்னொருமுறை தொட்டால்.........

**கலியன் :—** நீங்கள் துணிக்காகச் சண்டை போட்டுக்கொண்டால் இவ்விரைச்சலில் அக்கொலைகாரன் விழித்துக்கொள்வான். நீங்கள் கொலை செய்யவும் முடியாது, இராசா

ஆகவும் முடியாமல் போய்விடும். அல்லாமலும் நம் மூவரை யும் பிடித்துக் காலில் போட்டு மிதித்துக் கசக்கிவிடுவான்.

**கணேசன் :—** அடே கலியா, கொடியில் உள்ள துணி கள் நம் தலைக்குமேல் இருக்கின்றன. எடுத்து உடுத்திப் பார்த்தால் மிச்சம் தெரியும். ஆனால் அரசன் உடைகள் போக மற்றத் துணிகளை நீங்கள் இருவரும் வேண்டிய அளவு எடுத்துக்கொள்ளுங்கள். பாக்கி ஒன்றும் நம் தலைக்குமேல் இருக்கக்கூடாது. நம் காலில் மிதித்து எங்காவது ஓரிடத்தில் மறைத்துவைத்து விடவேண்டும்.

**திருக்கு :—** துணியை மறைத்து வைக்கும் திருட்டுத் தனம் எனக்குப் பிடிக்கவில்லை. அரசன் கட்டளையாக இருந்தாலும் எனக்கு இது பிடிக்கவில்லை.

**கலியன் :—** எனக்குத் துணி வேண்டாம். நம் காலம் வீணாகப்போகின்றது. கொலை செய்தால்தான் மந்திரம் தொலையும்.

**கணேசன் :—** திருக்கு, நமது அரசாங்கத்தில் புத்திசாலி களுக்கு அடிக்கடி வெகுமதி கொடுக்கப்படும். தொழிலுக் கெல்லாம் வரியுண்டு. தலைக்குமேல் இருந்த துணிகளைக் கீழே தளர்த்தும் தொழிலுக்குத் தொழில் வரியாக அத்துணிகளில் சிலவற்றைக் கருவூலத்தில் வைக்கச் சொன்னேன். இதனை நீ திருட்டென்று சொன்னால் உனக்கு வெகுமதியே கிடையாது. கலியா, உன் கைகளிலும் உடம்பிலும் பிசினைத் தடவிக்கொண்டு வேண்டிய துணிகளை ஒட்டிக்கொள். அப்பத்தான் நழுவாமல் இருக்கும்.

**கலியன் :—** வேண்டாம், எனக்கு வேண்டாம். காலம் வீணாகின்றது.

**கணேசன் :—** ஏ திருக்கு, நான் சொல்வதைக் கேள். துணிகளைச் சுருட்டு. நான் அரச உடைகளை அணிந்து

கொள்கிறேன். மீதித் துணிகளை நமது அரசாங்கக் கருவூலத்தில் மறைவாக வைக்கவேண்டியதுதான். இந்தா எடுத்துக்கொள்.

(சயசீலன் திட்டப்படி வேடர் பல வேட்டை நாய்களுடன் வருகின்றனர்).

**வேடன் :—** நாய்களை ஏவி — ஏ கறுப்பு, நீ போய் கலியனின் கழுத்தைப் பிடி. ஏ புலி, நீ சென்று கணேசனின் தொந்தியைப் பிராண்டு. ஏ கோம்பை, நீ போய் திருக்கின் கெண்டைச் சதையைக்கடி. (மூன்று பேரும் ஓடுகிறார்கள்) விடாதீர்கள். எலும்பு நொறுங்க விரட்டுங்கள். இரத்தம் காணுமல் விடாதீர்கள். ஆனால் உயிருக்கு அழிவுவரக்கூடாது என்பது சயசீலனின் உத்தரவு. தலைவர் சொற்படியே தான் நாம் நடக்க வேண்டும்.

**சயசீலன் :—** காத்தவா, உன் இனத்துக்கும் உனக்கும் இனி விடுதலைதான். இன்னும் சில அலுவல்கள் உன்னுல் முடிக்கப்படல் வேண்டும். பிறகு விடுதலைதான்.

---

## அங்கம் 5. களம் 1.

(சயசீலன் வீட்டிற்குமுன் — மந்திரக் கருவிகளுடன் இருந்துகொண்டு சயசீலன் காத்தவனுடன் உரையாடல்.)

**சயசீலன் :—** எனது எண்ணங்கள் கைகூடவும் — மந்திரங்கள் பலிக்கவும் — யாவரும் கீழ்ப்படியவும் — அனைத்தும் நன்மையாக முடிகின்றன. உனக்கு விடுதலை தந்தனுப்ப வேண்டியதுதான். கடலில் புயல் காற்றைக் கிளப்பியபோது விரைவில் உனக்கு விடுதலை தந்தனுப்ப எண்ணியிருந்தேன். ஆனால் இன்னும் சற்றுப் பொறுத்துக்

கொள். கப்பலில் வந்தவர்கள் அனைவரையும் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டியவனாக இருக்கிறேன்.

**காத்தவன் :—** அனைவரும் நலமே. ஆனால் கப்பலில் வந்தவர்கள் பலவிடங்களில் பிரிந்து கிடக்கின்றனர். ஓரிடத்தில் உள்ளவர் மற்ற இடத்தில் உள்ளவரைப்பற்றி ஒன்றும் அறியாத நிலையில் இருக்கின்றனர். தாங்களாக விடுதலை செய்யாவிட்டால் அவரவரும் ஆயுள் தண்டனையாளராகவே இருக்க வேண்டியதுதான். அரசர் இராசேந்திரரும் அவர் தம்பியும் பித்தம் பிடித்தவர் போலவே இருக்கின்றார்கள். இல்லாவிட்டால் அவர்கள் இறந்தே போயிருப்பர். எனினும் சிற்சில சமயங்களில் கண்ணீர் வடித்துத் துன்பக்கடலில் தோன்றுகின்றார்கள். தங்கள் அன்பர் கோவிந்தமாரர் தமது கிழ உடலிலிருந்து பெரிய அருவியையே உண்டாக்கி விடுகிறார் தனது ஒழியாத அழுகையால். தாங்கள் நேரில் பார்த்தால் மந்திரக் கருவிகளை எறிந்துவிட்டு, அருவி ஆறுகு மாறு சேர்ந்து அழுதுகொண்டிருப்பீர்கள்.

**சயசீலன் :—** காத்தவா, நீ மனிதநிலையடைந்தனையா? அவ்வளவுக்கு உணர்கின்றாயா ?

**காத்தவன் :—** நான் மனிதப் பிறவியாக இல்லாத காரணத்தால் தான் இங்குவந்து தங்களிடம் அதுபற்றிப் பேசுகிறேன். அதனை அடைந்து விட்டால் அங்கேயே அழுதுகொண்டு கிடக்க வேண்டியதுதான்.

**சயசீலன் :—** நீ ஒரு ஆவி. உனக்கு எம்மைப்போல் உணர்ச்சி இராதென்பது உண்மையாக இருந்தும் நீ அவர்கள் பொருட்டு இரங்கிப் பேசுகிறாய். நன்கு பார்த்தால் கண்ணீர் வடியக் கிடக்கும் அளவில் தோன்றுகிறாய். அவர்களைப்போல உண்டு, உடுத்து, களித்துத்தூங்கும் நான் அவர்களைப் பார்த்தால் எவ்வளவு வருந்த நேரும்? ஆனால் அவர்கள் செய்த பிழையைத் திருத்துவதற்

க்காகவே நான் செய்த இச்செயல் ஒரு வகையில் என்னைச் சார்கிறது. மற்றொரு வகையில் எனது அறிவு அதனை மாற்றி மன்னிக்கத் தூண்டுகின்றது. பழிக்குப்பழி வாங்குவதினும் இரக்கம் காட்டி மன்னிப்பதுதான் சிறந்த பண்பாடு. கண் தகர நூறினும் கரும்பு இன்சுவையையே தரும். நானோ அந்த அஃறிணையினும் மாறாக நடந்துவிட்டேன். மேலும் அவர்களே தாம் செய்த பிழையை உணர்ந்த பின்னரும் நான் அவர்களை விடுதலை செய்து நன்னிலையில் வைக்க முற்படாதது தவறுதான். மந்திர சக்தி மனிதப் பண்பாட்டினைக்கூட மறக்கத் தூண்டும் என்பது கண்டும் எனது மந்திரக்கருவிகளை வைத்திருப்பது தவறாகும். மந்திர சக்தியும் நீயும்கூட மனிதர்களை அடக்கவும் துன்புறுத்தவும் ஆற்றல் பெற்றிருப்பினும் மனிதனுக்கு அடக்கம்தான். முதலில் நான் எனது மந்திரக் கருவிகளை அழித்து மண்ணில் புதைத்து விடுகிறேன். மந்திர சக்தியையும் விலக்கிவிடுகிறேன். அவர்கள் இனித் தம் பழைய நிலைக்கு வந்துவிடுவார்கள். இனி யாவும் இயற்கையில் நடக்கும்.

**காத்தவன்** :— ஐயா, நான் சென்று அவர்களை அழைத்து வருகிறேன்.

**சயசீலன்** :— நீர் நிலைகளில் உள்ள பூதங்களே, எங்கும் நிரம்பியுள்ள ஆவிகளே, நிலவிலே வயல்களில் கைகோர்த்தோடும் பேய்களே, காளான் குட்டைகளைக் கணத்தில் உண்டாக்கும் பிசாசுகளே, உங்கள் உதவிகொண்டு கருங்கடலையும் நீல விண்ணையும் சண்டையிட வைத்த நான் — இடி மின்னலை உண்டாக்கிய நான் — மரங்களைப் பிளந்த நான்—மலைகளை அசைத்த நான்—இறந்தவர்களை எழுப்பிய நான் — எனது மந்திர சக்தியை மந்திரக் கருவிகளை ஒழித்ததின் மூலமாக இன்று விலக்கிவிட்டேன். இனி யாவரும் ஒருபடித்தாக ஓரினமாக வாழ்வோமாக.

(காத்தவராயனுடன் இராசேந்திரன் — வீராசேந்திரன் — அமணன் — கோவிந்தமாறர் — ஆதிநாராயணன் — வருதல்)

**சயசீலன் :**—கோவிந்தரே, உமக்கு இவ்வளவு தொல்லை ஏற்பட்டிருக்கக்கூடாது. அது சேர்க்கையால் பெற்ற பலன் போலும். இனி உமக்கு மயக்கம் நீங்கித் தெளிவு உண்டாக வேண்டியதுதான். கோவிந்தரே தாங்கள் மதிப்புமிக்க தொண்டு செய்தீர்கள். உங்களை நான் வாழ்த்துகிறேன். உம்மை உலகம் புகழும். அமணன் என்னையும், எனது சிறுமியையும் கொடுமையாக நடாத்தியதற்குப் போதிய துன்பம் அனுபவித்தாயிற்று. கணேசன் முதலிய யாவரையும் நான் மன்னித்து அன்பு காட்டுகிறேன். நிறைமதியன்று கடல் பொங்கிக் கரையுடன் இணைந்து தவழ்வது போல் உங்கள் உணர்ச்சி பொங்கி என்னுடன் இணைந்து தவழ்கின்றது. காத்தவரே, உமக்கு முன்நிற்பது ஒரே அலுவல். அது முடிந்ததும் விடுதலைதான். கப்பலில் உள்ள தலைவன், மாலுமிகள், மற்றைய இடங்களில் மயங்கிக்கிடப்போர் அனைவரையும் அழைத்துவரல் வேண்டும். அன்புடையோர்களே, நீங்கள் அனைவரும் என்னை நன்கு தெரிந்து கொள்ளுமாறு எனது உடையுடன் வருவேன். (சயசீலன் எழுந்து செல்லுதல்)

**கோவிந்த :**— இவ்விடத்தில் சுகம், துக்கம், ஏமாற்றம், வியப்பு, மாயம், மந்திரம் எல்லாம் நிறைந்து நம்மைக் குழப்புகின்றன. என்னளவில் உண்மையில் மிகவும் குழப்பம் தான். தெய்வமே, இத்தீவுக்கு வரக்கருணை செய்த நீ, வேறொரு நல்ல குழப்பமற்ற இடத்துக்கு நாங்கள் செல்ல ஏதாவது வழி செய்யமாட்டாயா?

**சயசீலன் :**— (தன் பழைய உடையுடன் பேசுதல்)— அன்பர்களே, வஞ்சி மன்னன் இன்னும் உயிருடன்தான் இருக்கின்றேன். யாருக்கும் ஐயம் வேண்டாம். நீங்கள் எனது இருப்பிடத்துக்கு வந்தீர்கள். நான் உங்களை வரவேற்றேன். நீங்கள் என்னுடன் கலந்துள்ளீர்கள் என்று நம்புகின்றேன்.

அமணன் :— தங்களை முதலில் நான் ஒரு மாயாவி யாகவே நினைத்தேன். இத்தீவுக்கு வந்து பல ஏமாற்றங் கள் அடைந்தேன். (கையைப்பிடித்துக்கொண்டு) அண்ணா, உங்கள் நாடித்துடிப்பு எனக்கு ஆறுதல் கூறுகிறது. நான் தங்கள் முகத்தைப் பார்த்தது முதல் எனது தீய எண்ணங் களும் பாவச் செயல்களும் ஒவ்வொன்றாய் நழுவத் தொடங்கிவிட்டன. எனது நிலைமையை என்னால் விரித்துச் சொல்லவே இயலாது. அதைச் சொன்னாலும் சமூகத் துக்கு வேண்டாத ஒரு கதையாகவே இருக்கும். அண்ணா, தங்கள் அரசாங்கத்தைத் தாங்களே ஒப்புக்கொண்டு என்னை மன்னித்துக் காப்பாற்றுங்கள். ஆனால் தாங்கள் இத்தீவினை அடைந்த விதத்தை மட்டும் அறிவிக்க விரும்புகிறேன்.

சயசீலன்:— கோவிந்தரே, உம்மை நான் சொற்களால் எவ்வாறு பாராட்ட முடியும்! அருகில் வந்து உட்காருங்கள்.

கோவிந்தமாரூர்:— தாங்கள் எனது தலைவர்தான் என் பதனை என்னால் இன்னும் நம்பமுடியவில்லையே?

சயசீலன்:— இன்னும் இத்தீவின் மாயை அகல வில்லையா? வெளிப்படையாக நிகழ்வதெல்லாம் இத்தீவில் கனவுபோல் தோன்றுகின்றதா? கனவு நிலைத்த தெளி வைத் தரும். அன்பர்களே இராசசிம்மனும், அமணனும் செய்த துரோகத்துக்கு அரசியல் முறைப்படி, கடுந்தண்டம் தருதல் வேண்டும். ஆனால் மன்னித்தேன். அரசாங்கத்தைப் பெற்றுக்கொள்ளுதல் மூலமாக நான் வஞ்சி மன்னன் என்ற முறையில் மன்னிப்பை உறுதி செய்துவிட்டேன்.

இராசேந்திரன்:— ஐயா, தாங்கள் மீண்டும் வஞ்சியரச ராகி மன்னித்தீர்கள் குற்றவாளிகளை யெல்லாம். அது மகிழ்ச்சிதான். ஆனால் மகனை இழந்த எனக்கு என்ன ஆறு தல் கூறமுடியும்? என்னால் பொறுக்க முடியவில்லையே.

**சயசீலன்:—** நாம் உடலெடுத்தது இன்பம் துய்ப்பதற்காகவல்ல. தழைத்த மரத்தின் ஊடே தோன்றும் சிற் சில காய்கள்போல துன்பத்தழைப்பின் ஊடே தோன்றும் சிற் சில இன்பங்களில் செருக்குக் கொள்ளாது துன்பத்தைப் பெற்றுக்கொள்வதற்கேதான். மகனை இழந்தமை தங்களால் பொறுக்க முடியவில்லை யென்றால் மகளைப் பிரிந்துள்ள எனது நிலைமையைக் கண்டாவது தாங்கள் ஆறுதலடையலாமல்லவா?

**இராசே:—** ஐயோ, தாங்களும் என்னைப்போலவா? இருவரும் ஒரே நிலைக்கு ஆளாகிவிட்டோமா? அவர்கள் இருவரும் இருந்தால் வஞ்சி, நாகை இரண்டிற்குமே உரிமையாளர்களாகி நல்லாட்சி செய்ய நாம் கண்டின்புறலாமே? நமது வாழ்வின் முடிவில் நமது உயிர்கள் துன்பச் சுமையுடன் பிரிவதா? நமது பிரிவில் நமது பிள்ளைகள் கண்ணீர் விட அவர்களின் இனிய முகத்தைப் பார்த்துக்கொண்டு அமைதியாகப் பிரிவதல்லவா மெற்றோர்களுக்கு இயற்கையான வழி. அவ்வழிக்கு மாறாக நமது நிலைமை அமைவதா? எனக்கு மிகவும் வருத்தம் தருவதாகவன்றோ உளது உங்கள் நிலைமை. உங்கள் மகளும் எனது மகனும் உயிர் பிழைத்து வருவதாக இருந்தால் நான் இக்கடலின் அடியில் சிப்பியாக இருக்கவும் உடன்படுவேன். நமது விருப்பத்தை நிறைவேற்றிவைக்க இத்தீவில் யார் உள்ளார்கள்?

**இராச:—** அரசே, தாங்கள் கடலிலிருந்து இத்தீவுக்கு எப்படி வந்தீர்கள்? இத்தீவில் எப்படியெல்லாம் வாழ்ந்தீர்கள்? புயலிலிருந்து நாங்கள் எப்படித் பிழைத்தோம்? இவையெல்லாம் விளங்கச் சொன்னால்தான் எங்கள் மனம் அமைதிபெறும். தங்களை யாவரும் வஞ்சி மன்னன் என்று உண்மையாக நம்பி மதிப்புக்காட்ட வழியுண்டாகும்.

**சயசீலன்:—** இந்த விந்தையான தீவில் நீவிர் இந்த அளவுக்குத்தான் அமைதிபெறலாம். நான்தான் வஞ்சி மன்னன். நீங்கள் மூவரும் சேர்ந்து எம்மை வெளியேற்றினீர்

கள். நான் இங்கு வந்தது—இங்கு தலைவனானது—நீங்கள் இங்குவந்து சேர்ந்தது முதலிய நிகழ்ச்சிகளையெல்லாம் மற்றொரு நாளைக்கு யாவரும் ஒன்றாகக் கூடியிருக்கும்போது விளக்கமாகக் கூறுவேன். ஆனால் தாங்கள் யாவரும் சேர்ந்து எனக்கு வஞ்சி அரசினைத் தந்தமையால் உங்களுக்குக் கைம்மாறு காட்டுதலும் இன்பத்தை ஊட்டுதலும் எனக்குரிய கடமையாகவும் நீதியாகவும் நான் எண்ணுகிறேன். இத்தீவின் குடிகளற்ற அரசனுக்குக் கொலு மண்டபம் இல்லாத அரண்மனை இதுதான். இங்கேதான் நான் தங்கியிருப்பது. அருள்கூர்ந்து யாவரும் இக்குகைக்குள்ளே வாருங்கள். உங்களால் அங்கே காணப்படுவன உங்களுக்கு எவ்விதப் பயனைத் தரும் என்பதனை நான் கூற விரும்பிலன். அது முடிந்தபொழுது தோன்றுமன்று.

(குகைக்குள்—வீராசேந்திரனும்—மாலினியும் யாழை மிழற்றிக்கொண்டுள்ளனர்.)

**இராச:—** இது என்ன விந்தை? வீராசேந்திரனே தான். இளவரசே, நீ இங்கு எப்படி வந்தாய்?

**வீரராசே:—** புயல் பயமுறுத்தியது. யாருக்கும் கெடுதல் விளையவில்லை. கடல் அலைகள் உங்களையெல்லாம் விழுங்கி ...எதற்காக நடக்காதவற்றைச் சொல்லவேண்டும். (முழங்கால் படியில் தந்தை முன்னின்று) அப்பா, வணக்கம் உங்கள் மனம் என்னபாடுபட்டிருக்குமோ?

**இராசே:—** அப்பா, எழுந்திரு, நீடூழி வாழ்வாயாக. (அணைத்துக்கொள்ளுதல்).

**மாலினி:—** ஆ, என்ன விந்தை. நான் காண்பது ஒரு புது உலகம். அழகிய உலகம். மக்கள் இனமே அழகு நிறைந்தது என்பதைக் காண்கின்றேன்.

**சயசீலன்:—** உனக்கு எல்லாம் அழகாகத்தான் தோன்றும். நீ பார்ப்பது அழகுக் கண்ணுடி வழியாதலின் அப்படித் தோன்றுவதில் விந்தையில்லே.

**இராசே:—** வீரராசேந்திரா, உன்னேடிருந்த தெய்வத்தின் பெயர் என்ன? இத்தீவின் காவல் தெய்வமா? இத்தெய்வத்தின் அருளால்தான் நாம் உயிருடன் ஒன்றுசேர முடிந்ததா?

**வீரராசே:—** தந்தையே நீங்கள் ஐயுறும் உருவம் தெய்வம் அல்ல. நம்மைப்போன்ற மானிடப் பிறவியே, ஆனல் இப்பெண் தெய்வத்தின் அருளால் என் வாழ்க்கைத் துணேவியானுள். நான் தங்களே இழந்துவிட்டதாகவே கருதியிருந்தமையால் தங்களின் உடன்பாடின்றி இவளேத் துணேவியாக்கிக்கொண்டேன். இப்பெண்ணின் தந்தையார் தான் இவர். இவரது (சயசீலன்) பெருமையையும் மற்ற மற்றவற்றையும் நான் இளேஞனுக இருந்தபோதே எனக்குத் தாங்கள் கூறியிருந்தீர்களல்லவா? அவர்களே நான் பார்க்குமுன் எனக்கு அவர்கள் உயிர்ப்பிச்சை தந்து இத்தெய்வப் பெண்ணேயும் தந்தார்கள். இறந்தவரை மீட்டுத் தருதல்போல் தங்களேயும் தந்தார்கள். தங்கள் உடன்பாடின்றி யாங்கள் கணவனும் மனேவியுமானதற்கு எங்களே மன்னிப்பீர்களல்லவா?

**இராசே:—** அப்பா, நம்மிருவர் உடலிலும் ஓடுவது ஒரே இரத்தம்தான். நீ செய்த காரியத்தில் எனக்கு முழுதும் உடன்பாடுதான்.

**கோவிந்த:—** இறைவனின் அளவிலாக் கருணேதான் என்னென்ன செய்கின்றன—சயசீலன் வஞ்சியிலிருந்து இத்தீவுக்கு வந்ததும்—இத்தீவிலிருந்து நாகைக்குக்கூட அவள் அரசியானதும்—இறந்தவர்கள் பிழைத்ததுபோல் நாம் இங்கு ஒன்றுகூடியுள்ளதும் எண்ணும்போது இராஜேந்திர கமலத்தின் வாழ்வும் நன்கு அமையும் என்பதில்

என்ன தடை? இறைவனது வழிகளை நாம் எவ்வாறு அறிய முடியும்? இறைவனே! காதலர்கள் வாழ்வைச் செம்மைப் படுத்துவாயாக.

**இராசே:—** மாலினி, வீராசேந்திரா, உங்கள் இருவர் கைகளையும் நீட்டுங்கள். (பிடித்துக்கொண்டு) நீங்கள் இருவீரும் இல்லறமாகிய சகடத்துக்கு நீதியும் அன்புமாகிய கால்களாக இருந்துகொண்டு வாழ்வினை நடத்துங்கள். உங்களின் சிறந்த வாழ்வினைக்கண்டு மனம் புழுங்கும் வீணர்கள் உலகில் உள்ள கேட்டுக்கும் துன்பத்துக்கும் வாரிசுகளாக அமையட்டும்.

(காத்தவன்—மீகானையும், மாலுமிகளையும் அங்கு அழைத்து வருகிறான்)

**மாலுமி:—** இது நனவா கனவா என்பதில் எனக்கு இப்போதும் ஐயம் உண்டு. என்னை—ஏன் எங்கள் யாவரையும் கப்பல் வேலையை நிறுத்தச்செய்து அழைத்துக்கொண்டு போய் யாரோ படுக்கவைத்ததும், இப்போது எழுப்பி அழைத்துக்கொண்டு இங்கே கொண்டுவந்ததும் நினைத்தால் தெளிவு எங்கே வரும்? யாருடைய வாழ்விலும் நிகழாத ஒன்றாகவே தோன்றுகிறது எனக்கு.

**மீகான்:—** நீ சரியாகக் கூறினாய், கப்பலும் நம்மைப் போல் தூங்கி விழித்துச் சுறுசுறுப்பாகவே நிற்கின்றது. ஒரு கொடிகூடக் கெடவில்லை. பளபளப்பு மிகுந்தே காணப் படுகின்றது.

**இராசே:—** எல்லாம் புதுமையாகத்தான் இருக்கின்றது. நாம் நம்மைப்பற்றி அறிந்துகொண்டுள்ளதாக எண்ண ஒன்றுமே இல்லை. எல்லாம் மறைவுதான். மறைவுக்குள்ளே தான் நாம் ஏதோ நடமாடுகின்றோம். எல்லாம் இருள்தான். நமக்குக் கொடுக்கப்பட்டுள்ள அறிவு பெயரளவில் தான் அறிவு போலும். வெளியிலிருந்து வேறு சிறந்த அறி

வென்னும் பொருள் நம் அறிவில் கலந்தால்தான் ஏதேனும் விளங்கிக்கொள்ள முடியும் என்று எண்ணும் அளவுக்குத் தான் இப்போதுள்ள அறிவு பயன்படுகிறது.

**சயசீலன்:—** அரசரே, தாங்கள் ஏன் குழம்பிக்கொள் கின்றீர்கள். அமைதியாக இருங்கள். ஒன்றும் மறைவான தல்ல. எல்லாம் தெளிவாக அறியக்கூடியனவும் உணரக் கூடியனவும்தான். அதற்குரிய பொழுது வரும்போது— விரைவில் வரும்—எல்லாம் தெளிவுபடுத்துவேன். அறியக் கூடாதன ஒன்றுமில்லை. பேரொளிமுன் மறையக்கூடியது ஒன்றுமே இல்லையென்பது உறுதி. (காத்தவன்—கணேசன், திருக்கு, கலியன் மூவரையும் அழைத்துவரல்)

**கணேசன்:—** அடே திருக்கு, கலியா, இனி நீங்கள் ஒவ்வொருவரும் உங்களுக்காக உழைக்கக்கூடாது. தன்னைத்தவிர பிறர் நன்மைக்காவே உழைக்கவேண்டும். காலம்போல் உங்களுக்கு எல்லாம் கிடைக்கும். ஆகையால் காலத்தைப் பாருங்கள். பிறருக்காக உழைங்கடா.

**திருக்கு:—** ஏ கணேசா, எனக்கு ஒருமுகம்—அதிலே இரண்டு கண்—அந்தக் கண்கள் பார்க்கின்ற எல்லாம் உண்மையானால் இங்கே ஒரு கூட்டம் தெரிகிறதே அதுவும் உண்மைதாண்டா.

**கலியன்:—** அடே அப்பா! எல்லோரும் பார்க்க நன் ருகத்தான் இருக்கிறார்கள். இன்றைக்கு எனக்கு உடம்பு புண்ணாய்விடும்.

**இராச:—** (அமணனைப் பார்த்து) இந்த மீன் உருவம் நாம் கண்ட அதிசயங்களில் எல்லாம் மிகச் சிறந்ததாக உளது. இதைக் கொண்டுபோனால் நம் ஊர்ப்பக்கம் நல்ல வேடிக்கை யாக இருக்கும். நல்ல இலாபம்கூடச் சம்பாதிக்கலாம்.

**சயசீலன்:—** இவனை உங்களுக்குத் தெரியாது. இவன் கலியன். இவன் தாய் கூனி பெரிய மந்திரக்காரி. அழிவு

வேலை செய்வதில் நிறைந்த சக்தியுடையவள். அவள் மகன் இவன். எனது ஆள். உங்கள் ஆட்கள் இருவரையும் கொண்டு என்னைக் கொல்ல ஏற்பாடு செய்தான். இவர்கள் உங்களுடன் வந்தவர்கள்தானே? இவர்கள் உடையைக் கொண்டு ஐயுறுகிறீர்கள். அவைகள் இங்கிருந்து எடுத்தவை.

இராசே: நமது அடைப்பைக்காரன் கணேசன் — கட்டியங்காரன் திருக்கு—எங்கேயப்பா தங்கியிருந்தீர்கள் ?

திருக்கு:— என்னால் பேச முடியாது. பேசினால் உடம்பெல்லாம் வலிக்கும். கணேசா, நீ பேசு.

கணேசன்:— என் பெயர் படுகாயமடா, கணேசா என்று சொல்லாதே. நான் பட்டது போதும்.

சயசீலன் :— படுகாயமா, நீதானே இத்தீவுக்கு அரசன்?

திருக்கு:— இல்லை, இவன் இத்தீவுக்கு அரசப்பிள்ளை.

கணேசன்:— அப்படியில்லை. நாங்கள் இனிக் கலியனுடன் சேர்ந்து உங்கள் வேலைகளைச் செய்கிறோம். எங்களை மன்னியுங்கள்.

சயசீலன்:— கலியா, இவர்களை அழைத்துக்கொண்டு போய் யாவருக்கும் இரவுக்கு வேண்டிய உணவு முதலியவற்றை ஒழுங்குபடுத்து. அவர்கள் உனக்குத் துணையாக இருந்து ஆவன செய்வர்.

கலியன்:— இப்போது நானும் ஒரு மனிதனாய்ப் போனேன். இரவுக்கு வேண்டியவற்றையெல்லாம் உடனே ஒழுங்கு செய்வேன். (போகின்றனர்)

சயசீலன்:— அவையினரே, இன்று இரவு இங்கு உண்டபின் எனது நிகழ்ச்சிகள் அனைத்தையும் உங்களுக்குத்

தெளிவுபடுத்துவேன். அப்போது பொழுது புலரும். உடனே கப்பலிடம் அழைத்துச்சென்று கப்பலேற்றுவேன். நானும் உங்களுடன் வருவேன். நாகைக்குச் சென்று நாகையில் இவர்கள் திருமணத்தை முன்னிட்டுப் பெரிய விருந்து நடத்தலாம். பின்னர் நான் வஞ்சி சென்று எனது பிறப்பிடத்தில் அமைதியாக உயிர் நீப்பேன். இதுவே எனது விருப்பம்.

இராசே:— அரசரே, தங்கள் வரலாற்றினை முதலில் கேட்கப் பெரிதும் விரும்புகிறேன் நான்.

சயசீலன்:— உணவுக்குப் பின்னர்தான் நிகழ்ச்சிகள் நடைபெறும். காத்தவா, நீ விடுதலை பெறலாம். நான் மந்திரக் கருவிகளை விலக்கிவிட்டேன். பெரிய சக்திகள் இப்போது என்னிடம் இல்லை. ஆகையால் கப்பலை அமைதியாகக்கொண்டு நாகை சேர்ப்பித்துவிட்டு உன் விருப்பம் போல் திரிவாய், முழு விடுதலை.

காத்தவன்:— தங்கள் குறிப்பறிந்து எதுவும் இயற்றி வந்த நான் தாங்கள் பணித்தவையை உறுதியாக நிறைவேற்றுவேன். பிரியா விடைபெறுகிறேன் வணக்கம்.

வண்டுதே னுண்ணும் பூக்களில் நானும்
வளமுறக் கூடி மனங்களிப் பேனே
மண்டுறு மலர்களே என்னரும் பாயலாய்
மாபெருஞ் சோலையில் மகிழ்ந்திருப்பேனே
நண்ணுறு வேனிலில் நான்கலந் தோடி.
நாளும் பறந்து சிரித்திருப்பேனே
உளமகிழ் கொண்டே உலகொரு பூவாய்
உவந்தாடி நாளும் உயிர்சிறப்பேனே.

சயசீலன்:— அவையோர்களே, சக்தி இழந்த எனக்குத் திடுமென ஒரு எண்ணம் உண்டாகின்றது. அது சரியானதா தவறானதா என்று முடிவு செய்யும் சக்தி என்

னிடம் இல்லை. எனது வாழ்நாளில் அறிவு நிறைந்த பகுதியை நான் இத்தீவில்தான் கழித்தேன். எனது மந்திரக் கருவியையும் புதிய சக்தியையம் இங்கேயே விட்டுவிட்டேன். நீங்களே முடிவு செய்யுங்கள். தீர்ப்பளியுங்கள். இந்த நிலையில் நான் இங்கேயே தங்குவது சிறந்ததா, உங்களுடன் நாகை வருவது சிறந்ததா என்பதனை என்னால் முடிவுசெய்ய முடியவில்லை. முதலில் உங்களுடன் நாகை வருவதாகக் கூறினேன். எனினும் பிறகு தோன்றிய இவ்வெண்ணம் எனது சொல்லைக்கூட மாற்றிக்கொள்ளுமாறு என்னை வற்புறுத்திக்கொண்டிருக்கிறது. ஆனால் என் தம்பி வஞ்சியரசை என்னிடம் தந்ததும் நான் தம்பியை மன்னித்தேன். வஞ்சி மன்னன் என்ற நிலையில் உங்களுடன் எனக்கு ஒரு புதுக்கட்டு ஏற்பட்டுவிட்டது. அதுகொண்டு நோக்கின் எனது நிலையை நான் முடிவு செய்வதைக்காட்டிலும் நீங்கள் முடிவு செய்வதே பொருத்தமாகின்றது. நான் உங்களை எனது சக்தியால் மகிழ வைக்கலாம் என்பதிலோ அல்லது மயங்க வைக்கலாம் என்பதிலோ எனக்கு நம்பிக்கையில்லை. ஆனால் நீங்கள் விரும்பினால் என்னை மகிழ வைக்கலாம். மக்கள் ஆட்சிக் காலத்தில் எனது வாழ்நாட் கப்பலைச் செலுத்தும் காற்று உங்கள் மூச்சாகத்தான் இருக்க முடியும். எனது எதிர்காலம் மிகவும் சிக்கலானதாக இருக்கும்போல் தோன்றுகின்றது, ஆகையால் நான் உங்களுடைய ஒத்துழைப்பைத்—தயவைக்கூட விரும்புகிறேன். எனது விண்ணப்பம் இதுவேயாகும். கடவுளை நோக்கி முட்டாள் செய்யும் விண்ணப்பம் தவறாது கடவுளை அணுகும் என்பார்கள். எதிரிலே உள்ள தங்கள் முன்னின்று நான் செய்யும் விண்ணப்பம் உங்கள் மனத்தில் நன்றாகப் பதியும் என்பதில் ஐயமேது? ஆகவே எனது செயலில் குற்றங்கள் தோன்றின் அவற்றை மன்னித்து நம் உள்ளங்களை என் பக்கம் அணிவகுத்துத் திருப்புமாறு என் சார்பில் வேண்டிக்கொள்கின்றேன். இறைவன் அனைவரையும் காப்பாராக.

முற்றும்.

